## தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு  தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம் நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.

***அகில விராஜ் காரியவசம்***
***கல்வி அமைச்சர்***

**முன்னுரை**

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீன மயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கிலேயே தரம் 1 முதல் தரம் 11 வரையிலான சகல பாடநூல்களும் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக் கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ.எம். ஜயந்த விக்கிரமநாயக்க** — கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்,
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## வழிகாட்டல்

**டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி** — கல்வி வெளியீட்டு ஆணையாளர் (அபிவிருத்தி),
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## இணைப்பாக்கம்

**அஷ்ஷெய்க் எம்.ரீ. அப்துர் ரஹ்மான்** — உதவிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர்,
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## எழுத்தாளர் குழு

**மௌலவி எம். எல்.எம். யூஸுப்** — அதிபர்,
ரீ.பீ. ஜாயா ஸாஹிரா கல்லூரி, கொழும்பு 02.

**அஷ்ஷெய்க் எம்.ஆர்.எம். மிஹ்ளார்** — சிரேஷ்ட ஆசிரியர்,
அரபா ம.வி, உடுகொடை, ருக்கஹவில.

**அஷ்ஷெய்க் எம்.ஆர். ஹிஷாம் முஹம்மத்** — சிரேஷ்ட ஆசிரியர்,
அல் அஸ்ஹர் மத்திய கல்லூரி, திஹாரிய.

**அஷ்ஷெய்க் ஏ.எம். நஹீம்** — ஆசிரிய ஆலோசகர்,
வலயக் கல்விக் காரியாலயம், கட்டுகஸ்தொட்ட.

**அஷ்ஷெய்க் எம்.எப்.எம். பாஹிம்** — ஆசிரிய ஆலோசகர்,
வலயக் கல்விக் காரியாலயம், மினுவாங்கொடை.

**அஷ்ஷெய்க் எஸ்.ஏ.எம். ரிஸ்வி** — சிரேஷ்ட ஆசிரியர்,
அல் ஹிக்மா கல்லூரி, கொழும்பு 12.

**ஜனாப் எம்.ரீ.எம். முதஷ்ஹர்** பிரதி அதிபர், அரபா மத்திய கல்லூரி, வெலிகம.

**ஜனாப் எம்.எப்.எம். நஸ்ரி** அதிபர், அல் ஹம்ரா மகா வித்தியாலயம், தர்காநகர்.

**ஜனாப் எஸ்.ஏ.ஸீ.எம். கராமத்** ஓய்வு பெற்ற அதிபர், எட்மன்ட் வீட்டுத்திட்டம், கொழும்பு 06.

## பதிப்பாசிரியர் குழு

**அஷ்ஷெய்க் ஏ.ஸீ. அகார் முஹம்மத்** பிரதிப் பணிப்பாளர், நளீமியா இஸ்லாமிய கலாபீடம், பேருவளை.

**கலாநிதி எம்.எஸ்.எம். ஜலால்தீன்** சிரேஷ்ட விரிவுரையாளர், அரபு இஸ்லாமிய கற்கை பீடம், தென்கிழக்குப் பல்கலைக்கழகம்.

**மௌலவி எம்.ஐ.எம். நவ்பர்தீன்** உதவிப் பணிப்பாளர், முஸ்லிம் பாடசாலைகள் அபிவிருத்திப் பிரிவு, கல்வி அமைச்சு.

**அஷ்ஷெய்க் ஜே. எம். ஜஸார்** விரிவுரையாளர் (சமயப் பிரிவு), தேசிய கல்வி நிறுவகம், மகரகம.

**அஷ்ஷெய்க் ஏ. அப்துஸ் ஸமது** அதிபர், ஸாஹிரா தேசிய பாடசாலை, அநுராதபுரம்.

**அஷ்ஷெய்க் எம்.ரீ. அப்துர் ரஷ்மான்** உதவிக் கல்வி வெளியீட்டு ஆணையாளர், கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## மொழிப் பதிப்பு

**மெஹரூன் பீபி**

சிரேஷ்ட ஆசிரியை,
அல் அமீனியா கனிஷ்ட பாடசாலை,
தெனுவர, வெலம்பொட.

## சரவை பார்த்தல்

**மௌலவி ஏ. டப்ளியூ. அன்வர்தீன்**

அதிபர்,
ஒச்சட்வத்த முஸ்லிம் வித்தியாலயம், நிட்டம்புவ.

## இறுதி மதிப்பீடு

**மௌலவி எம்.என்.எம். இஜ்லான்**

பணிப்பாளர்,
பாதிபிய்யா அரபுக் கல்லூரி, கஹட்டோவிட்ட.
பிரதம கதீப்,
கொழும்பு பெரிய பள்ளிவாசல்.

**மௌலவி எம்.ரீ. இக்பால்**

ஆசிரிய ஆலோசகர்,
வலயக் கல்விக் காரியாலயம், கொழும்பு 02.

## கணினி வடிவமைப்பு

**எச்.எப். ரிஸ்னா**

கணினி வடிவமைப்பாளர்,
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## தளக்கோலம், படங்கள், அட்டை வடிவமைப்பு

**ஜனாப் எம்.டப்ளியூ.ஏ. அஸார்**

கணினி வடிவமைப்பாளர்,
மீள்பார்வை ஊடக மையம்,
கொழும்பு 09.

## பாடநூல் கருப்பொருட் பாடல்

மனதில் பூ பூத்திடும் புதிய புத்தகம்
வாசமே
கண்களில் காட்சி தோன்றும் எமது
உலகமே வெளிச்சமே.../

புத்தகம் அறிவு வரும் முகங்களில்
மகிழ்வு தரும்
புதிய புத்தகம் புதிய பொலிவு பெறும்
தினமுமே.

புத்தகம் கண்கள் தானே அதை
காப்பது போலவே
அறிவைத் தரும் புத்தகங்களை
மகிழ்வுடன் காப்போமே.

மனதில் பூ பூத்திடும் புதிய புத்தகம்.../

பாடலாசிரியர் :- சரத் குமார பெரேரா
இசை :- மகேஷ் தெனிப்பிட்டிய

# உள்ளடக்கம்

1

# தவ்ஹீத், ரிஸாலத், மஆத்



ஈமான் என்பதன் கருத்து நம்பிக்கை என்பதாகும். நம்பிக்கைகளுக்கு ஏற்பவே நடத்தைகள் அமையும். நம்பிக்கைகளும், நடத்தைகளும் சேர்ந் ததே முஃமின்களாகிய எங்களது வாழ்க்கையாகும். நடைமுறை வாழ்வில் நம்பிக்கையின் அடிப்படையிலேயே சில செயல்களை மேற்கொள்கிறோம். வேறு சிலவற்றைத் தவிர்ந்துகொள்கிறோம்.

உண்பதால் பசி தீரும் என்று நம்புகிறோம். எனவேதான் பசிக்கும்போது உணவு வகைகளைச் சமைத்தும் வாங்கியும் உண்கிறோம். நீர் அருந்துவதால் தாகம் தீரும் என்று நம்புகிறோம். எனவேதான் பயனுள்ள திரவங்களான பழச்சாறு, தேநீர், குளிர்ப்பானம் போன்ற நீராகாரங்களை அருந்தி தாகம் தீர்த்துக்கொள்கிறோம்.

விவசாயிகளைப் பாருங்கள். விதைகளை நாட்டினால் தானியம் கிடைக்கும் என்று நம்புகின்றார்கள். எனவேதான் நெல் மணிகளை விதைக்கிறார்கள். பின்பு பொன்னிறமான நெற்கதிர்களை அறுவடை செய்கின்றார்கள்.

முயற்சி செய்து படித்தால்தான் பரீட்சையில் சித்தியடையலாம் என்பது எமது நம்பிக்கை. எனவே பரீட்சை எழுதுவதற்கு முன்னர் விடாமுயற்சி செய்து படித்துப் பரீட்சை எழுதுகிறோம்.

செயல்களைச் செய்வதற்கும் செயல்களைச் செய்யாமலிருப்பதற்கும் நம்பிக்கையே அடிப்படையாக உள்ளது. நெருப்புச் சுடும் என்ற நம்பிக்கை நெருப்பில் கை வைக்காமல் தடுக்கிறது. நஞ்சு ஓர் உயிர்க்கொல்லி என்ற நம்பிக்கை அதனை அருந்தாமல் எங்களைத் தடுத்துவிடுகிறது.

இதேபோன்று முஸ்லிம்களாகிய எங்களுக்கும் நம்பிக்கைகள் இருக்கின்றன. அவற்றை விசுவாசிப்பதையே ஈமான் என்கிறோம். அதன் காரணமாகவே நாம் முஃமின்கள் (விசுவாசிகள்) என்றும் அழைக்கப் படுகிறோம்.

**ஈமான் இரண்டு வகைப்படும்.**

1. *ஈமான் முஜ்மல் (சுருக்கமான விசுவாசம்)*
2. *ஈமான் முபஸ்ஸல் (விரிவான விசுவாசம்)*

لَاإِلٰهَ إِلاَّ اللهُ مُحَمَّدٌ رَّسُوْلُ اللهِ என்ற கலிமாவின் பொருளை விளங்கி, உள்ளத்தால் உறுதியாக நம்பி, வாயால் மொழிவதன் மூலமாக இஸ்லாத்தில் நுழைந்துகொள்கிறோம்.

இந்தக் கலிமாவின் பொருள் - ‘‘அல்லாஹ்வைத் தவிர வணக்கத்துக் குரியவன் வேறு யாருமில்லை. முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார்கள்’’ என்பதாகும்.

இவ்வாறு விசுவாசம் கொள்வதே ஈமான் முஜ்மல் (சுருக்கமான ஈமான்) எனப்படுகிறது.

இரண்டாவது வகை ஈமான் ஆறு அம்சங்களை உள்ளடக்கியதாகும்.

آمَنْتُ بِاللهِ وَمَلاَئِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ وَالْيَوْمِ الْآخِرِ
وَالْقَدْرِ خَيْرِهِ وَشَرِّهِ مِنَ اللهِ تَعَالَى

“நான் அல்லாஹ்வையும், அவனது மலக்குகளையும், அவனது வேதங்களையும், அவனது தூதர்களையும் விசுவாசம் கொண்டேன். மேலும் மறுமைநாள் உண்டு எனவும் விசுவாசித்தேன். மேலும் நன்மை தீமை யாவும் அல்லாஹ்வின் நாட்டப்படியே (தக்தீரின் படியே) நடைபெறும் எனவும் விசுவாசம் கொண்டேன்”

இவ்வாறு விரிவாக ஈமான் கொள்வதை ஈமான் முபஸ்ஸல் என அழைக்கின்றோம். இஸ்லாமிய அறிஞர்கள் மேற்கூறப்பட்ட ஆறு அம்சங்களையும் மூன்று தொகுதிகளாக வகுத்துள்ளனர். அவை

1. தவ்ஹீத் - ஏகத்துவம்
2. ரிஸாலத் - தூதுத்துவம்
3. மஆத் - மறுமையுடன் தொடர்பானவை என்பனவாகும்.

### தவ்ஹீத்

அல்லாஹ் மற்றும் தக்தீருடன் தொடர்பான நம்பிக்கைகள் தவ்ஹீத் (ஏகத்துவம்) என்ற முதல் தொகுதியில் உள்ளடக்கப்படுகின்றன. அல்லாஹ் ஒருவன் அவனுக்கு இணைதுணை கிடையாது. அவன் யாவற்றையும் அறிந்தவன். வல்லமை மிக்கவன். அவனது நாட்டப்படியே யாவும் நடைபெறும் என்ற நம்பிக்கைகளை உள்ளடக்கிய தொகுதியே ஏகத்துவம் என அழைக்கப்படுகின்றது.

### ரிஸாலத்

ரிஸாலத் (தூதுத்துவம்) என்ற தொகுதியில் நபிமார்கள், வேதங்கள், மலக்குமார் பற்றிய நம்பிக்கைகள் உள்ளடக்கப்படுகின்றன. மனிதர்கள் நேரிய வழியில் வாழ்வதற்காக நேர்வழியைக் காட்டிக்கொடுப்பதற்காக அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட தூதர்களே நபிமார்கள் ஆவர். இவர்களில் விசேடமானவர்கள் ரஸூல்மார்கள் என அழைக்கப்படுகின்றனர்.

ஒவ்வொரு சமூகத்திற்கும் நபிமார்கள் அனுப்பப்பட்டுள்ளனர். அவர்களுள் குறிப்பிட்ட சிலருக்கு அல்லாஹ் வேதங்களையும் ஸுஹுபுகளையும் வழங்கினான். நபிமார்களுள் இறுதியானவர் முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களாவார். அவருக்கு

அல்லாஹ்வால் வழங்கப்பட்ட இறுதி வேதமே அல்குர்ஆன் ஆகும். அல்லாஹ் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் என்ற மலக்கின் ஊடாகவே நபிமார்களுக்கான வேதங்களையும் போதனைகளையும் வழங்கினான். மேலும் அவனது கட்டளைப்படி இயங்கும் எண்ணிலடங்கா மலக்குகள் உள்ளனர். இவ்வாறான நம்பிக்கைகளை உள்ளடக்கிய தொகுதியே ரிஸாலத் எனப்படுகின்றது.

### மஆத்

மறுமை தொடர்பான அம்சங்களை உள்ளடக்கிய விடயங்கள் மஆத் என்ற தொகுதியில் அடங்குகின்றன. மரணத்தின் பின்னர் கப்ரில் வாழ்வு உண்டு. உலக வாழ்வு முடிந்ததும் மறுமை வாழ்வு ஆரம்பமாகும். அங்கு மனிதர்களது உலக செயற்பாடுகள் விசாரிக்கப்படும். அதிக நன்மை செய்தோருக்கு சுவனமும், அதிக தீமை செய்தோருக்கு நரகமும் வழங்கப் படும்.

ஈமானின் சகல அம்சங்களையும் நாம் விளங்கி உணர்ந்து நம்ப வேண்டும். அவ்வாறு நம்புவதைத்தான் **ஈமான் இக்தியாரி** என்போம். இத்தகைய ஈமான் எமது வழ்க்கைக்கு உந்து சக்தியை வழங்குகின்றது. முஃமின்களாகிய நாம் ஈமானில் உறுதி கொள்ளும்போது எம்மிடம் துணிவு, வீரம், உற்சாகம், தியாகம், கடின உழைப்பு போன்ற பண்புகள் உருவாகும். சோம்பல், கோழைத்தனம், சுயநலம் போன்ற பண்புகள் அற்றுப் போகும்.

ஈமானின் அம்சங்களை நாம் விளங்கி உணர்ந்து நம்புவோம். ஈமான் பரம்பரையால் வருவதல்ல. பகுத்தறிவினால் வருவதுமல்ல. அது அல்லாஹ்வாலும் நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களாலும் அல்குர்ஆனிலும் ஸுன்னாவிலும் கூறப்பட்டுள்ளவாறு அமைய வேண் டும். நாமும் அவ்வாறாக ஈமான்கொண்டு செயற்றிறன் உள்ளவர்களாகவும் ஊக்கமுள்ளவர்களாகவும் வாழ்வோம். மறுமையில் வெற்றி பெற்று சுவனத்தை அடைவோம்.

**பயிற்சி**

**சரி பிழை கூறுக**

1. ஈமான் என்பதன் பொருள் நம்பிக்கை என்பதாகும். ( )
2. ஈமான் முஜ்மல் என்பது விரிவாக ஈமான் கொள்வதைக் குறிக்கும். ( )
3. வேதங்கள் பற்றிய நம்பிக்கை தவ்ஹீத் எனும் தொகுதியில் அடங்கும். ( )
4. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே இறுதி நபியாவார்கள். ( )

**சுருக்கமான விடை தருக.**

1. நம்பிக்கை காரணமாகத் தவிர்ந்துகொள்ளும் இரு செயல்களைக் குறிப்பிடுக.
2. ஈமான் முபஸ்ஸல் என்பதன் பொருள் யாது ?
3. இலாஹ் என்பதன் பொருள் யாது ?
4. மலக்குமார்கள் பற்றிய நம்பிக்கை எந்தத் தொகுதியில் அடங்கும் ?
5. ஈமான் இக்தியாரி மூலம் முஃமினில் ஏற்படும் பண்புகள் மூன்றைக் குறிப்பிடுக.

# 2

# அல்லாஹ் வணக்கத்துக்குரியவன்

அல்லாஹ் இவ்வுலகை 'குன்' (ஆகுக) என்ற சொல்லின் மூலம் படைத்தான். பின்னர் மனிதர்களையும் ஜின்களையும் அவனை வணங்குவதற்காகப் படைத்தான்.

மனிதனின் இயல்பை அறிந்திருந்த மலக்குகள் ''அநியாயம் செய்து இரத்தத்தை ஓட்டக்கூடியவர்களையா படைக்கப் போகிறாய். நாமோ உன்னைப் புகழ்ந்து தூய்மைப்படுத்துபவர்களாக இருக்கின்றோம்'' என்ற அல்லாஹ்வுடனான நீண்ட உரையாடல் ஸூரதுல் பகரா 30 வது வசனத்தில் தொடர்கிறது.

மனிதனைப் படைத்த அல்லாஹ், தன்னை மாத்திரமே வணங்க வேண்டும் என மனிதனுக்குக் கட்டளையிட்டான்.

மனிதர்களே! நீங்கள் உங்களையும் உங்களுக்கு முன்னிருந்தோரையும் படைத்த உங்கள் இறைவனையே வணங்குங்கள். (அதனால்) நீங்கள் இறையச்சம் (தக்வா) உடையோராகுவீர்கள். (அல்குர்ஆன் 2:21)

எனினும் மனிதன் இதனை மறந்து வரையரைக்குட்பட்ட தனது அறிவுக்கு ஏற்றாற் போல் அல்லாஹ் படைத்த சிருஷ்டிகளில் காணப்படும் விசேட தன்மைகளைப் பார்த்து கடவுளர்கள் என்று அவற்றை நம்பி வணங்க முற்பட்டான்.



இவ்வாறு அல்லாஹ்வை விடுத்து இன்னொரு கடவுளைக் கற்பனை செய்து வணங்குவது ஷிர்க் ஆகும். அல்லாஹ் இப் பாவத்தை ஒரு போதும் மன்னிக்க மாட்டான். இவ்வாறு ஷிர்க் வைப்பது தொன்றுதொட்டு இடம்பெற்று வருகிறது. இது முற்றிலும் தவறானதாகும்.

''அவனே அல்லாஹ், வணக்கத்திற்குரிய நாயன் அவனைத் தவிர, வேறு யாரும் இல்லை, அவனே பேரரசன், மிகப்பரிசுத்தமானவன், சாந்தியளிப்பவன், தஞ்சமளிப்பவன், பாதுகாப்பவன், (யாவரையும்) மிகைப்பவன், அடக்கியாள்பவன், பெருமைக்குரித்தானவன் - அவர்கள் இணைவைப்பவற்றையெல்லாம் விட்டு அல்லாஹ் மிகத் தூய்மை யானவன். (அல்குர்ஆன் 59:23)

'(வானம், பூமி ஆகிய) இவற்றில் அல்லாஹ்வையன்றி வேறு தெய்வங்கள் இருந்திருந்தால், நிச்சயமாக இவையிரண்டும் அழிந்தே போயிருக்கும்' (அல்குர்ஆன் 21:22) என்று அல்குர்ஆன் அறிவுறுத்து கின்றது.

வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ் மாத்திரமேயாவான். அவன் தனித்தவன். யாருடைய தேவையும் அற்றவன். அவனுக்கு நிகராக யாரையும் கொண்டுவரவும் முடியாது. அவனே அண்ட சராசரங்களையும், அதிலுள்ள உயிருள்ள, உயிரற்ற அனைத்தையும் படைத்தவன். அவனை அறியாமல் மரத்தின் இலைகூட உதிராது. மறைவானதையும் பகிரங்க மானதையும் அறிபவன் அவனே; அவன் அளவற்ற அருளாளன், நிகரற்ற அன்புடையோன். அவன் அனைத்தையும் மிகைத்தவனாக, ஞானம் மிக்கவனாக இருக்கின்றான். எனவே அவனையே நாம் வணங்க வேண்டும்.

நபியே நீர் கூறுவீராக! ''அல்லாஹ் அவன் ஒருவனே. அவன் தேவைகள் ஏதும் இல்லாதவன். அவன் எவரையும் பெற்றெடுக்கவில்லை அவனை யாரும் பெற்றெடுக்கவில்லை. அன்றியும் அவனைப்போல் எவரும் எதுவும் இல்லை.'' (அல்குர்ஆன் 112: 1-4)

அல்லாஹ்வை வணங்குதல் என்பது சில கிரியைகளில் ஈடுபடுவது மாத்திரமல்ல. முழு வாழ்க்கையிலும் அவன் கூறிய பிரகாரம் ஏவல்களைப் பின்பற்றி விலக்கல்களைத் தவிர்த்து வாழ்வதாகும். அல்லாஹ் மனிதர்களை நேர்வழிப்படுத்த மனிதர்களிலிருந்து தேர்ந்தெடுத்தவரே நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களாவார் என்பதை நாம் அறிவோம். எனவே இறைத் தூதராகிய அவர் காட்டிய வழியின் பிரகாரம்

எமது முழு வாழ்வையும் நாம் அமைத்துக் கொள்ளல் வேண்டும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டளையிட்டவற்றை ஏற்று நடப்பதோடு தடுத்தவற்றை முற்று முழுதாகத் தவிர்ந்துகொள்வது எமது கடமையாகும்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் போன்றே முன்னைய நபிமார்களும் அல்லாஹ்வை மாத்திரமே வணங்கும்படி மக்களுக்குப் போதித்தார்கள். அல்லாஹ்வையே வணங்க வேண்டும் என மக்களை அழைத்த ஆதம் அலைஹிஸ்ஸலாம், நூஹ் அலைஹிஸ்ஸலாம், இப்றாஹிம் அலைஹிஸ்ஸலாம், மூஸா அலைஹிஸ்ஸலாம், ஈஸா அலைஹிஸ்ஸலாம் போன்ற நபிமார்களின் வரலாற்றை அல்லாஹ் அல்குர்ஆனில் தெளிவாக எடுத்தியம்பியுள்ளான்.

''உமக்கு முன்னர் நாம் அனுப்பிய தூதர்களுக்கெல்லாம் நிச்சயமாக என்னைத் தவிர வேறு நாயனில்லை. எனவே என்னையே நீங்கள் வணங்குங்கள் என்று வஹி அறிவித்தோம்'' (21:25)

வணக்கத்திற்கு உரியவன் என்பதன் பொருள், உதவி தேடத் தகுதி யானவனும் அவனே என்பதாகும். அவன் மனிதர்களை விட்டு வெகு தூரத்தில் இல்லை. தரகர்கள் கொண்டுதான் அவனை அடையவேண்டும் என்ற அவசியமுமில்லை. அவன் மனிதர்களுக்கு மிக சமீபமாக இருக் கின்றான். மனிதனின் தேவைகளை நிறைவு செய்து தருபவனும் அவனேயாவான். எனவே அவனிடமே உதவி தேட வேண்டும்.

''உன்னையே வணங்குகிறோம், உன்னிடமே உதவி தேடுகிறோம்'' என்று தினமும் தொழுகையில் மொழிந்து விட்டு இருந்துவிடக் கூடாது. எமது அனைத்து தேவைகளையும் அல்லாஹ்விடமே முன்வைக்க வேண்டும். அவன் அடியார்களுடன் தாயை விட இரக்கமுள்ளவன். முக்காலத்தையும் அறிந்த அவன் அடியார்களின் தேவைகளை நிறைவேற்றி வைப்பான். அவ்வாறு நிறைவேற்றாது போனாலும் அவனிடம் அவன் உதவி தேடியதற்கான நன்மைகளை வாரி வழங்குகின்றான்.

### அல்லாஹ்வின் அடியானாக வாழ்வதற்கான சில வழிமுறைகளை அவதானியுங்கள்

1. மனிதர்கள் தனக்குப் பணிவாக நடந்து கொள்ள வேண்டும் என அல்லாஹ் விரும்புகின்றான் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.
2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்க்கை முன்மாதிரிகளை வாழ்வில் பின்பற்றுங்கள்.
3. பெருமை உங்களை அழிக்கும். எனவே அதனை முற்றாக விட்டு நீங்கிக் கொள்ளுங்கள்.
4. அனைத்தையும் அல்லாஹ்விடமே முன்வையுங்கள்; உதவி தேடுங்கள்.

### பயிற்சி

1. அல்லாஹ்வின் பண்புகள் ஐந்தினைக் குறிப்பிடுக.
2. நாம் அல்லாஹ்விடம் உதவி தேட வேண்டும் என்பதற்கான காரணம் யாது?
3. அல்லாஹ் முக்காலங்களையும் அறிந்தவன் என்பதன் மூலம் நீர் விளங்கிக் கொள்வது யாது?
4. அல்லாஹ்வின் அடிமையாக இருக்க வேண்டுமானால் பெருமை, கர்வம் கொள்ளல் கூடாது. இதனை நீர் ஏற்றுக் கொள்கின்றீரா? காரணம் தருக.
5. வணக்கத்துக்குரியவன் அல்லாஹ் மட்டுமே என்பதற்கான அல்குர்ஆன் ஆதாரங்கள் இரண்டை எடுத்துக்காட்டுக.

# 3

# அல்லாஹ்வின் பண்புகள்

## (صِفَاتُ اللهِ)

இஸ்லாத்தின் அடிப்படை நம்பிக்கைக் கோட்பாடுகளுள் அல்லாஹ் பற்றிய நம்பிக்கை முதன்மையானதாகும். எனவேதான் இறைவன் பற்றிய மிகத் தெளிவான கொள்கையை இஸ்லாம் வழங்கியுள்ளது.

அல்லாஹ் ஒருவனே! இவ்வுலகையும் அதிலுள்ள சகலவற்றையும் அவனே படைத்தான். படைக்கப்பட்ட சகலவற்றையும் பரிபாலிப்பவனும் அவனே. இவ்வுலகின் நிகழ்ச்சிகள் அனைத்தினதும் நிர்வாகியும் அவனே. நன்றி பாராட்டத்தக்கவனும் புகழுக்குரியவனும் அவன் மாத்திரமே.

சகல வல்லமையும் பொருந்திய அவனது கட்டளைகள் வணங்கி வழிபடத்தகுந்த கட்டளைகள் ஆகும். அவற்றை மறுக்கவோ, அவற்றிற்கு மாறு செய்யவோ முடியாது. இவ்வாறு இஸ்லாம் மிகத் தெளிவாக அல்லாஹ் பற்றிய கொள்கையை முன்வைக்கிறது.

‘‘ஸிபாத்துல்லாஹ்’’ எனும் அல்லாஹ்வின் பண்புகள் பற்றி அறிவதன் மூலம் இவ் விசுவாசத்தை மேலும் உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

அல்லாஹ்வின் உயிரோட்டம் மிக்க தன்மைகளையே ‘‘ஸிபாத்துல் லாஹ்’’ எனும் அல்லாஹ்வின் பண்புகள் புலப்படுத்துகின்றன.

**அல்லாஹ்வின் பண்புகளை மூன்றாகப் பிரித்து நோக்கலாம்.**

### 1. வாஜிபாத்:

வாஜிபாத் என்பது அல்லாஹ்வுக்குக் கட்டாயமாக இருக்கக்கூடிய பண்புகளைக் குறிக்கும். இவ்வாறான பண்புகள் 20 என அடையாளப்படுத்தப்பட்டுள்ளன.

### 2. முஸ்தஹீலாத்:

அல்லாஹ்வுக்கு இருக்கவேண்டிய மேற்படி பண்புகளுக்கு நேர் எதிரான பண்புகள் முஸ்தஹிலாத் எனப்படுகிறது. அதாவது அல்லாஹ்வுக்கு

ஒருபோதும் இருக்கமுடியாத பண்புகளையே முஸ்தஹீலாத் குறித்துக் காட்டுகிறது.

அல்லாஹ்வுக்கு வாஜிபான, முஸ்தஹீலான ஸிபத்துக்களைப் பின்வருமாறு ஒப்பு நோக்கலாம்.

**வாஜிபான ஸிபத்துக்கள்**

**(அல்லாஹ்வுக்கு கட்டாயம் இருக்க வேண்டிய பண்புகள்)**

| வாஜிபாத் | الوَاجِبَاتُ |
|---|---|
| *1. உள்ளமை* | ١– وُجُوْدٌ |
| *2. ஆரம்பமில்லாமை* | ٢– قِدَمٌ |
| *3. நிலைத்திருத்தல்* | ٣– بَقَاءٌ |
| *4. படைப்புக்களுக்கு மாற்றமாதல்* | ٤– مُخَالَفَةٌ لِلْحَوَادِثِ |
| *5. சுயமாக நிலைத்திருத்தல்* | ٥– قِيَامُهُ بِنَفْسِهِ |
| *6. ஒருவனாயிருத்தல்* | ٦– وَحْدَانِيَّةٌ |
| *7. சீவித்தல் (சீவன்)* | ٧– حَيَاةٌ |
| *8. அறிவு* | ٨– عِلْمٌ |
| *9. நாட்டம்* | ٩– إِرَادَةٌ |
| *10. சக்தி* | ١٠– قُدْرَةٌ |
| *11. கேள்வி* | ١١– سَمْعٌ |

| | |
|---|---|
| 12. பார்வை | ١٢– بَصَرٌ |
| 13. பேச்சு | ١٣– كَلاَمٌ |
| 14.சீவனுள்ளவனாயிருத்தல் | ١٤– حَيٌّ |
| 15. அறிவுள்ளவனாயிருத்தல் | ١٥– عَالِمٌ |
| 16. நாட்டமுடையவனாயிருத்தல் | ١٦– مُرِيْدٌ |
| 17. சக்தியுள்ளவனாயிருத்தல் | ١٧– قَادِرٌ |
| 18. கேட்பவனாயிருத்தல் | ١٨– سَمِيْعٌ |
| 19. பார்ப்பவனாயிருத்தல் | ١٩– بَصِيْرٌ |
| 20. பேசுபவனாயிருத்தல் | ٢٠– مُتَكَلِّمٌ |

## முஸ்தஹீலான ஸிபத்துக்கள்

**(அல்லாஹ்வுக்கு அறவே இருக்க முடியாத பண்புகள்)**

| முஸ்தஹிலாத் | المُسْتَحِيْلاَتُ |
|---|---|
| 1. இல்லாமை | ١– عَدَمٌ |
| 2. புதிதாய் உண்டாதல் | ٢– حُدُوْثٌ |
| 3. அழிதல் | ٣– فَنَاءٌ |
| 4. படைப்புக்களுக்கு ஒப்பாதல் | ٤– مُمَاثَلَةٌ لِلْحَوَادِثِ |

| | |
|---|---|
| 5. பிறவற்றால் நிலைத்திருத்தல் | ٥– القِيَامُ بِالْغَيْرِ |
| 6. பலராயிருத்தல் | ٦– التَّعَدُّدُ |
| 7. மரணம் | ٧– مَوْتٌ |
| 8. அறியாமை | ٨– جَهْلٌ |
| 9. நிர்ப்பந்தம் | ٩– كَرَاهَةٌ |
| 10. இயலாமை | ١٠– عَجْزٌ |
| 11. செவிடு | ١١– صَمَمٌ |
| 12. குருடு | ١٢– عَمَى |
| 13. ஊமை | ١٣– بُكْمٌ |
| 14. மரணித்தவனாயிருத்தல் | ١٤– مَيِّتٌ |
| 15. நிர்ப்பந்திக்கப்பட்டவனாக இருத்தல் | ١٥– مُكْرَهٌ |
| 16. அறியாதவனாக இருத்தில் | ١٦– جَاهِلٌ |
| 17. இயலாதவனாயிருத்தல் | ١٧– عَاجِزٌ |
| 18. செவிடனாயிருத்தல் | ١٨– اَصَمُّ |
| 19. குருடனாயிருத்தல் | ١٩– اَعْمَى |
| 20. ஊமையாயிருத்தல் | ٢٠– اَبْكَمُ |

### 3. ஜாஇஸ் الجَائِزُ:

**அல்லாஹ்வுக்கு இருக்கவும் இல்லாதிருக்கவும் முடியுமான பண்பு**

அல்லாஹ்வுக்கு இருக்கவும் இல்லாதிருக்கவும் முடியுமான பண்புகள் அல்லது அல்லாஹ் தான் விரும்பியதை விரும்பியவாறு செய்வதும், செய்யாமல் விடுவதும் அவனுக்கே உரியன என்பதை ''ஜாஇஸ்'' எனக் குறித்துக் காட்டப்படுகிறது. உதாரணமாக: நல்லோருக்கு நன்மையளித்தல் தீயோருக்கு தண்டனையளித்தல், கொடுத்தல், கொடுக்காது விடல் போன்றவற்றை செய்வதும் செய்யாது விடுவதும் அவனது விருப்பதிற்குரியதாகும்.

மேற்படி அல்லாஹ்வின் பண்புகள் உலகில் வேறு எந்தவொரு படைப்பிற்கும் இருக்கமுடியாதவையாக அமைந்துள்ளன. அல்லாஹ் ஆரம்பமும் முடிவுமின்றி ஒருவனாக இருக்கின்றான் என்பதும் படைப்புக்களுக்கு ஒப்பாக இல்லாமல் தன்னைக் கொண்டே நிலைத்திருக்கின்றான் என்பதும் அவனது தனிப்பெரும் ஆற்றலையும் வல்லமையையும் எடுத்துக் காட்டுகின்றன.

இப்பிரபஞ்சத்தைப் பரிபாலிக்கின்ற அல்லாஹ் களைப்பு, சோர்வு, தூக்கம் போன்ற படைப்பினங்களுக்குரிய பலவீனங்களிலிருந்து நீங்கியவனாக உயர்ந்த ஆற்றல் மிக்கவனாக, ஒருபோதுமே மரணிக்காதவனாக, என்றுமே உயிர்வாழ்ந்து கொண்டிருக்கின்றான் என்பதையும் அவனது ஸிபத்துக்கள் எடுத்துக் காட்டுகின்றன.

அல்லாஹ்வின் பண்புகளில் கேள்வி, பார்வை, பேச்சு என்பனவும் அவனது சக்தியைப் புலப்படுத்திக் காட்டுகின்றன. அவனது பார்வை படாத இடங்கள் உலகில் எங்குமே இல்லை எனும் அளவுக்கு விசாலமானது. அவன் கேட்காத எந்தவொரு சிறிய சத்தமும் இல்லையென்று கூறக்கூடிய அளவு அவனது செவிப்புலன் பலம்பெற்றிருக்கிறது. அவ்வாறே அவன் பேசுபவனாகவும் கட்டளை பிறப்பிப்பவனாகவும் இருக்கின்றான் என்பதை அவனது வேதங்கள் தெளிவுபடுத்திக் காட்டுகின்றன.

''அவனைப் போன்று எப்பொருளும் இல்லை; அவன்தான் யாவற்றையும் செவியேற்பவன்; பார்ப்பவன். (அஷ் ஷூரா 11)

இவ்வுலகில் வியக்கத்தக்க மாற்றங்களை ஏற்படுத்தியிருக்கும் மனிதனின் அறிவு, அல்லாஹ்வின் அறிவின் மிகச் சொற்பமானதாகும். ''அவனை அறியாமல் பூமியில் எந்த இலையும் விழுவதில்லை'' (அல் அன்ஆம் - 59) என்று அல்குர்ஆன் குறித்துக் காட்டுகிறது.

இப்பிரபஞ்சத்தில் தாவர இனம் எப்பொழுது உருவாகியதோ அன்றிலிருந்து இறுதிவரையில் பூமியில் விழக்கூடிய இலைகளைக்கூட அறிந்து வைத்திருக்கும் சக்தி அல்லாஹ்வுக்கு மாத்திரமே இருக்கிறது. சாதாரண அறிவுகொண்ட மனிதனால் இது முடியாத காரியமாகும். அல்லாஹ்வின் அறிவு எனும் பண்பின் விசாலத்தை இச்சான்று தெளிவுபடுத்துகின்றது.

இவ்வாறு அல்லாஹ்வின் ஏனைய பண்புகளின் விசாலத்தையும் விளக்கலாம். அல்லாஹ்வுக்கு 99 திருநாமங்கள் இருக்கின்றன. இத் திருநாமங்களும் அவனது பண்புகளை விளக்கிக் காட்டுகின்றன. அவற்றைப் படைப்பினங்களின் பண்புகளுக்கு ஒப்பாக்காமல் விசுவா சிக்க வேண்டியது அவசியமாகும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் ஸஹாபாக்களும் கொண்டிருந்த கருத்திலேயே அல்லாஹ்வின் பண்புகளைப் புரிந்துகொள்ள வேண்டும். அத்துடன் அவனது பண்புகளில் ஒருபோதும் சந்தேகங் கொள்ளக்கூடாது. அவன் கூறியபடியே நம்பிக்கை கொண்டு எமது ஈமானைப் பலப்படுத்திக் கொள்ள வேண்டும்.

## பயிற்சி

***சரியாயின் (சரி) எனவும், பிழையாயின் (பிழை) எனவும் குறிப்பிடுக.***

*1. ஸிபாதுல்லாஹ் என்பது அல்லாஹ்வின் பண்புகளையும் செயல் களையும் குறிக்கின்றன. ( )*

*2. அல்லாஹ்வின் பண்புகளை நான்காக வகுத்துக் காட்டலாம். ( )*

*3. இல்முன் என்பதற்கு எதிர்ப்பண்பு ஜஹ்லுன் என்பதாகும். ( )*

*4. அல்லாஹ் கேட்கவும் பார்க்கவும் பேசவும் சக்தியுடையவன். ( )*

*5. விரும்பியதை விரும்பியவாறு செய்வதும் செய்யாமல் விடுவதும் வாஜிபான பண்புகளில் அடங்கும். ( )*

*6. படைப்பினங்களில் காணப்படும் பலவீனங்கள் அல்லாஹ்வுக்கு இல்லை. ( )*

*7. அல்லாஹ் அறியாத நிலையில் மரத்திலிருந்து எந்த இலையும் உதிர்வதில்லை. ( )*

*8. அல்லாஹ்வின் திருநாமங்கள், அவனது பண்புகளிலிருந்து வேறுபட்டவை. ( )*

4

# மலக்குகளை விசுவாசம் கொள்வோம்

كُلٌّ اٰمَنَ بِاللّٰهِ وَمَلٰٓئِكَتِهٖ وَكُتُبِهٖ وَرُسُلِهٖ

‘‘(விசுவாசிகள்) யாவரும் அல்லாஹ்வையும் அவனுடைய ***மலக்குகளையும்*** அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் விசுவாசிக்கின்றனர்’’.(2:285)

அன்வர் ஏழாம் தரத்தில் கல்வி கற்கும் மாணவன். மாலையில் வகுப்பு வேலைகளை வீட்டில் செய்து கொண்டே வாப்பாவின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். வாப்பா வரும் சப்தத்தைக் கேட்டு, உம்மா வாசலுக்கு வந்தார்.வாப்பாவின் ஸலாமுக்கு இருவரும் பதில் கூறினர். வாப்பா! என்று அன்வர் ஏதோ பேச முற்பட்டான். மஃரிப் தொழுத பின் உன் சந்தேகங்களுக்கு விடைதருகிறேன். முதலில் தொழுது விட்டு வருவோம் வா! என்றார் வாப்பா.

தொழுது விட்டு வந்து படிக்கும் அறையில் வாப்பாவும் அன்வரும் அமர்ந்தனர். உம்மா இருவருக்கும் தேனீர் கொண்டு வந்தார். அன்வர் என்ன உன் சந்தேகம்? சொல் என்றார் வாப்பா. பிரச்சினை என்றவுடன் உம்மாவும் பக்கத்தில் அமர்ந்து கொண்டார். இவ்வாறு அவர்களின் உரையாடல் ஆரம்பமானது.

**அன்வர்:** வாப்பா! ‘‘அல்லாஹ் மலக்குகளை நோக்கி நான் பூமியில் எனது பிரதிநிதியை ஆக்கப் போகிறேன், என்று கூறிய சமயத்தில், அதற்கு மலக்கு கள், குழப்பங்கள் செய்து அதில் இரத்தத்தை ஓட்டப் போகும் அவரை அதில் உன்னுடைய பிரதிநிதி ஆக்குகிறாயா? நாங்களோ உனது பரிசுத்தத் தன்மையைக் கூறி உன்னுடைய புகழைக் கொண்டு உன்னைத் துதிசெய்து கொண்டிருக்கிறோம், என்று கூறினார்கள்’’ இவ்வாறு தர்ஜுமா புத்தகத்தில் வாசித்தேன். அல்லாஹ்வுக்கு நெருக்கமான அந்த மலக்குகள் பற்றி அறிய எனக்கு ஆவலாக இருக்கிறது. அவர்களைப்பற்றி கொஞ்சம் விளக்கிச் சொல்லுங்களேன் வாப்பா!

**வாப்பா:** எனது அன்பு மகனே! மலக்குகளைப் பற்றி ஒவ்வொரு முஸ்லிமும் அறிந்திருப்பது அவசியமாகும். இப்பொழுது அவர்களைப் பற்றிக் கூறுகிறேன் கவனமாகக் கேட்டுக்கொள். மலக்குகளை விசுவாசம் கொள்வது ஈமானின் இரண்டாவது அம்சமாகும். இது பற்றி அல்குர்ஆனில் பின்வருமாறு விபரிக்கப்பட்டுள்ளது. ''(விசுவாசிகள்) யாவரும் அல்லாஹ்வையும் அவனுடைய மலக்குகளையும் அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் விசுவாசிக்கின்றனர்''.(2:285)

**அன்வர்:** உம்மா நீங்களும் ஆலிமாதானே, மலக்குகள் எவ்வாறு படைக்கப்பட்டுள்ளார்கள் என்பதைப் பற்றிக் கூறுங்களேன்.

**உம்மா:** அல்லாஹ் அழகிய படைப்பாளன். அவனுடைய படைப்புக்களில் மலக்குகள் சிரேஷ்டமானோர் ஆவர். அவர்கள் மிக வலுவான படைப்பினமாகும். 'ஜின்கள் நெருப்பினாலும். மலக்குகள் ஒளியினாலும் படைக்கப் பட்டுள்ளனர்' (முஸ்லிம்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். அவர்களில் இரண்டு (இவ்விரண்டு) மூன்று (மும்மூன்று) நான்கு (நன்நான்கு) இறக்கைகள் முதல் அறுநூறு இறக்கைகள் கொண்ட மலக்குகள் வரை உள்ளனர். ''நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களை முழுமையான தோற்றத்தில் கண்டார்கள். அவர்களுக்கு அறுநூறு இறக்கைகள் இருந்தன.''(முஸ்லிம்)

**வாப்பா:** ஆமாம்! மலக்குகளின் எண்ணிக்கையை அல்லாஹ் மாத்திரமே அறிவான். அவர்களுக்குக் குறிப்பிட்ட உருவம் கிடையாது. நாய் பன்றி தவிர்ந்த ஏனைய விரும்பிய உருவில் அவர்களால் தோன்ற முடியும். அவர்களில் ஆண் பெண் என்ற வேறுபாடோ, மேலும் அவர்களுக்குக் குடும்பம், உறவு, பசி, தாகம், தூக்கம், அயர்வு, மறதி, ஆசை போன்ற தேவைகளோ கிடையாது.

**அன்வர்:** அவர்கள் ஏன் படைக்கப்பட்டார்கள். அவர்களுக்கு ஏதாவது கடமைகள், பொறுப்புக்கள் இருக்கின்றனவா?

**உம்மா:** அல்லாஹ் இப்பிரபஞ்சத்தைத் திட்டமிட்டே படைத்துள்ளான். அத்திட்டங்களைத் துல்லியமாக நிறைவேற்ற மலக்குகள்

படைக்கப்பட்டுள்ளனர். அல்லாஹ் அவர்களுக்கு ஏராளமான பொறுப் புக்களை வழங்கியுள்ளான். அப்பொறுப்புக்களை நிறை வேற்றுவது அவர்களின் பணியாகும். ''அல்லாஹ் அவர்களுக்கு ஏவியதில் ஒரு சிறிதும் மாறு செய்யமாட்டார்கள்'; (66:6) என அல்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. அல்லாஹ்வைச் சதாவும் துதி செய்து கொண்டிருத்தல், அவனின் கட்டளைக்காகக் காத்திருத்தல், அர்ஷைச் சுமத்தல், மனிதர்களைப் பாதுகாத்தல், நன்மை தீமையைப் பதிவு செய்தல், சுவர்க்கத்தை அலங்கரித்தல், நல்லடியார்களுக்கு உதவுதல், பாவிகளைத் தண்டித்தல், உயிர்களைக் கைப்பற்றல் போன்றன மலக்குகளின் சில பணிகளாகும்.

**வாப்பா:** ''உங்களில் ஒவ்வொருவரையும் மரண காலம் வரும் வரையில் பாதுகாத்து, பின்னர் அவரை நம்முடைய தூதர்கள்(மலக்குகள்) இறக்கச் செய்கின்றனர். அதில் ஏதும் தவறிழைப்பதில்லை''. (6:61)

விண்ணிலும், மண்ணிலும் அவர்கள் சுஜூது செய்யாத இடமே கிடையாது. அவர்கள் நாணமுள்ளவர்கள். துர்வாடையை அவர்கள் சகித்துக் கொள்ளமாட்டார்கள் .நல்லோரின் வீடுகளுக் குள் அவர்கள் பிரவேசிப்பார்கள். எனினும் ''நிச்சயமாக மலக்கு கள் நாய், உருவப்படம் உள்ள வீடுகளில் நுழையமாட்டார்கள்'' (புகாரி முஸ்லிம்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

**அன்வர்:** மனிதர்களுக்கும் அவர்களுக்கும் என்ன தொடர்பு என்பதை விளக்கிச் சொல்லுங்களேன் உம்மா!

**உம்மா:** மனிதர்களுக்கும் மலக்குகளுக்குமான தொடர்பு கருவறை தொடங்கி கப்ரையும் (மண்ணறை) தாண்டி மறுமை வரை தொடர்கிறது. 'மலக்குகளால், தாயின் கருவறையில் மனிதனுடைய செயல்கள், வாழ்வாதாரம், ஆயுள், நல்லவனா, கெட்டவனா என்பன எழுதப்படுவதுடன் உயிர் மூச்சும் ஊதப்படுகிறது' (முஸ்லிம்) அவ்வாறே மரணம் நெருங்கியவுடன் நல்லோருக்குப் பிரகாசமான முகத்துடனும், நிராகரிப்பாளருக்கு விகாரமான முகத்துடனும் தோன்றி உயிரைக் கைப்பற்றிச் செல்வார்கள். நரகில் தண்டிப்பதும், சுவனத்திற்கு வரவேற்பதும் அவர்களேயாவர்.

**அன்வர்:** அப்படியானால் அவர்களை நாம் ஈமான் கொள்ளவே வேண்டும். அவர்களை விசுவாசம் கொள்ளும் முறையை விளக்கமாகக் கூறுங்களேன் வாப்பா!

**வாப்பா:** இதுவரை நாம் கலந்துரையாடியவாறு மலக்குகள் மீது ஈமான் கொள்வது முஸ்லிமான ஆண்கள் பெண்கள் அனைவர் மீதும் கடமையாகும். அல்குர்ஆனிலும் அல்ஹதீஸிலும் பெயர் கூறப்பட்ட மலக்குகளைப் பெயர்களுடனும், ஏனையோரைப் பொதுவாகவும் விசுவாசம் (ஈமான்) கொள்ள வேண்டும். மலக்குகளின் தலைவர் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் ஆவார். மலக்குகளை விசுவாசம் கொள்ளாதோரை அல்குர்ஆன் பின்வருமாறு எச்சரித்துக் கண்டிக்கின்றது.

''எவன் அல்லாஹ்வையும் அவனுடைய ***மலக்குகளையும்*** அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் இறுதி நாளையும் நிராகரிக்கின்றானோ அவன் நிச்சயமாக வெகு தூரமான வழிகேட்டில்தான் செல்கிறான்''.(4:136)

இவ்வாறு அவர்கள் உரையாடிக் கொண்டிருந்தனர். உரையாடலின் இடையே வீட்டினுள் சென்ற உம்மா, ஒரு அட்டவணையைக் கொண்டு வந்து அன்வரிடம் கொடுத்து, நீங்களும் உங்களைப் போன்ற சிறுவர்களும் இந்த அட்டவணையைப் பார்த்து, மலக்குகளின் பெயர்களையும், அவர்களின் கடமைகளையும் அறிந்து கொள்வதுடன், அவர்களை உறுதியுடன் விசுவாசிக்கவும் வேண்டும் என்றும் கூறினார்.

## மலக்குகளின் பெயர்களும் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ள பொறுப்புக்களும்

| மலக்குகளின் பெயர்கள் | பொறுப்புக்கள் |
|---|---|
| ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் | நபிமாருக்கு வஹி கொண்டு வரல் |
| மீக்காயீல் அலைஹிஸ்ஸலாம் | உணவு, காற்று, நீர் ,நெருப்பு என்பவற்றுக்குப் பொறுப்பாயிருத்தல் |
| இஸ்ராபீல் அலைஹிஸ்ஸலாம் | ஸூர் ஊதுதல் (இரு முறை) |
| இஸ்ராயீல் (மலகுல் மவ்த்) அலைஹிஸ்ஸலாம் | உயிர்களைக் கைப்பற்றுதல் |

| | |
|---|---|
| முன்கர் அலைஹிஸ்ஸலாம், நகீர் அலைஹிஸ்ஸலாம் | கப்றில் கேள்வி கணக்குக் கேட்டல் |
| ரகீப் அலைஹிஸ்ஸலாம், அதீத் அலைஹிஸ்ஸலாம் | மனிதர்கள் செய்யும் நன்மை தீமைகளைப் பதிவு செய்தல் |
| மாலிக் அலைஹிஸ்ஸலாம் | நரகின் அதிபதி |
| ரிழ்வான் அலைஹிஸ்ஸலாம் | சுவர்க்கத்தின் அதிபதி |

## பயிற்சி

பின்வரும் கூற்றுக்கள் சரியாயின் சரி எனவும்,பிழையாயின் பிழை எனவும் அடையாளமிடுக.

1. ஈமானின் இரண்டாவது அம்சம் அல்லாஹ்வின் மலக்குகளை விசுவாசிப்பதாகும். ( )
2. மலக்குகளுக்குப் பல்வேறு ஆற்றல்களை அல்லாஹ் வழங்கி யுள்ளான். ( )
3. மலக்குகள் சில வேளைகளில் அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறு செய்வார்கள். ( )
4. ஒளியினால் படைக்கப்பட்ட அவர்களுக்கு இறக்கைகள் உள்ளன. ( )
5. அல்குர்ஆனில் சில மலக்குகளின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. ( )
6. மலக்குகளின் தலைவர் மீக்காயீல் அலைஹிஸ்ஸலாம் ஆவார். ( )
7. அவர்களுக்குப் பசி, தாகம், தூக்கம், அயர்வு எதுவும் கிடையாது. ( )
8. கப்றில் கேள்வி கணக்குப் கேட்பது ரகீப் அலைஹிஸ்ஸலாம் அதீத் அலைஹிஸ்ஸலாம் ஆவார்கள். ( )
9. நபிமார்களுடன் அதிகம் தொடர்பு கொண்ட மலக்கு ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் ஆவார். ( )
10. நாய் உருவப்படம் உள்ள வீடுகளில் மலக்குகள் பிரவேசிக்க மாட்டார்கள். ( )

5

# நஜீஸின் வகைகள்

ஒரு முஸ்லிம் இபாதத்களை நிறைவேற்றுவதற்குச் சுத்தமாக இருப்பது அவசியமாகும். அவன் சுத்தமாகவும் ஆரோக்கியமாகவும் இருப்பதற்கு நஜீஸ்களிலிருந்து (அசுத்தங்களிலிருந்து) தவிர்ந்து வாழ்வது அவசியமாகும். இவ்வாறான அசுத்தங்கள், அவற்றின் வகைகள், அவற்றிலிருந்து சுத்தமாகும் முறைகள் பற்றி இஸ்லாம் எமக்குத் தெளிவாகக் கூறியுள்ளது. அந்நஜீஸ்கள் பற்றி அறிந்துகொள்வோம்.

**நஜீஸின் வகைகள்**

சுத்தம் செய்யும் முறைகளை வைத்து நஜீஸ் மூன்றாகப் பிரித்து நோக்கப்படுகிறது.

1. சாதாரண நஜீஸ்
2. இலகுவான நஜீஸ்
3. கடுமையான நஜீஸ்

**1. சாதாரண நஜீஸுக்கான சில உதாரணங்கள்**

- மலம்
- சிறுநீர்
- இரத்தம்
- வாந்தி
- வதி
- மதி
- சாப்பிட அனுமதிக்கப்படாத பிராணிகளின் பால்
- பிராணிகளின் இறந்த உடல்
- உயிருள்ள பிராணிகளிலிருந்து பிரிந்த பகுதிகள்

### சுத்தம் செய்யும் முறை

மேலே குறிப்பிடப்பட்டுள்ள நஜீஸ் உடலிலோ, ஆடையிலோ படிந்துவிட்டால் குறித்த நஜீஸை முதலில் அவ்விடத்திலிருந்து நீக்கிவிட வேண்டும். பின்னர் நஜீஸின் சுவை, நிறம், மணம் ஆகிய மூன்றும் நீங்கும் வரை கழுவ வேண்டும். நீரால் மாத்திரம் நஜீஸை நீக்க முடியாதபோது சவர்க்காரம், சலவைத்தூள் போன்றவற்றைப் பயன்படுத்த வேண்டும். சுத்தம் செய்தபின்னரும் குறித்த நஜீஸின் நிறம், மணம் ஆகிய இரண்டுமோ அல்லது சுவை மட்டுமோ எஞ்சியிருந்தாலும் அது சுத்தமாகக் கருதப்படமாட்டாது.

**விதிவிலக்குகள்**

- தானாகவே இறந்த மீன், வெட்டுக்கிளி

  (இவை சுத்தமானவை. சாப்பிட அனுமதிக்கப்பட்டுள்ளன)
- இரத்தம் சிந்தாத பிராணிகளான எறும்பு, தேனீ போன்றன.
- சாப்பிட அனுமதிக்கப்பட்ட இறந்த பிராணிகளின் எலும்பு, கொம்பு, நகம், உரோமம், சிறகு போன்றவை.
- மிகச் சிறிய அளவில் உடையில், உடம்பில் படும் இரத்தம்
- தாய்ப்பால்

### 2. இலகுவான நஜீஸ்

தாய்ப்பாலை மட்டும் உணவாகக் உட்கொள்ளும் இரண்டு வயதுக்கு உட்பட்ட ஆண் குழந்தையின் சிறுநீர்.

### சுத்தம் செய்யும் முறை

இத்தகைய நஜீஸை சுத்தம் செய்யும்போது குறித்த நஜீஸைப் பிழிந்து அகற்றிய பின்னர், அவ்விடத்தில் சுத்தமான நீரைப் போதியளவு தெளித்து விடுவது போதுமானது.

### 3. கடுமையான நஜீஸ்

நாய், பன்றி என்பவற்றின் மலம், சலம், உமிழ்நீர், வியர்வை, இரத்தம் போன்ற அனைத்தும் இதில் அடங்கும்.

### சுத்தம் செய்யும் முறை

இந்நஜீஸை சுத்தம் செய்யும்போது முன்னர் கூறப்பட்ட முறைகளைக்

கடைப்பிடிப்பதுடன் இவற்றுக்கு மேலதிகமாக ஏழு தடவைகள் நீரூற்றிக் கழுவுதல் வேண்டும். முதல் தடவையிலோ அல்லது இடையிலோ மண் கரைசலை உபயோகித்துக் கழுவுதல் வேண்டும். கடுமையான நஜீஸ் படிந்துள்ள இடத்தில் நஜீஸின் மூவகைப் பண்புகளும் புலப்படாவிட்டாலும் கூட ஏழு தடவைகள் கழுவுதல் வேண்டும்.

பரந்த (கடல், குளம் போன்ற) நீர் நிலைகளில் சுத்தம் செய்யும்போதும், ஓடும் நீரில் சுத்தம் செய்யும்போதும் நீரைச் சிறிது கலக்கி அந்நீரில் அமிழ்த்திய பின் ஆறு தடவைகள் நீரினுள் அலசியெடுத்தல் போதுமானது.

பொதுவாக நஜீஸானவற்றைப் பயன்படுத்த முடியாது. ஆயினும் ஒருசில நஜிஸ்களைச் சுத்தம் செய்து பயன்படுத்த முடியும். அவ்வாறானவற்றுக்கு உதாரணமாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

**1. விலங்குகளின் தோல்** நாய், பன்றி தவிர்ந்த ஏனைய விலங்குகளின் தோல்களைப் பொறுத்த வரை அவற்றை நன்கு பதனிடுவதன் மூலம் உணவு தவிர்ந்த ஏனைய பல்வேறு தேவைகளுக்காகப் பயன்படுத்த முடியும்.

**2. மதுபானம் (கள்ளு)** இயற்கையாக எடுக்கப்படுகின்ற வேறு கலவைகள் சேர்க்கப்படாத கள்ளு, தானாகவே வினாக்கிரியாக மாறிவிட்டால் அதனை உணவுத் தேவைகளுக்குப் பயன்படுத்த முடியும்.

**3. நஜீஸ் விழுந்த உறைந்த பால்** பால் உறைந்து நெய், பட்டர், சீஸ் போன்ற கட்டியான நிலையில் இருந்து அதில் நஜிஸ் விழுந்தால் அந்நஜிஸ் படிந்த பகுதியை எடுத்துவிட்டு எஞ்சியதைப் பயன்படுத்த முடியும்.

**பயிற்சி**

1. நஜீஸ் என்ற பதத்தின் பொருளைத் தருக.
2. கடுமையான நஜீஸில் அடங்குபவை எவை?
3. இலகுவான நஜீஸை எவ்வாறு சுத்தம் செய்ய வேண்டும்?
4. நெய்யில் நஜீஸ் விழுந்தால் அதனை எவ்வாறு பயன்படுத்த வேண்டும்?
5. சாதாரண நஜீஸ்கள் நான்கைத் தருக.

# 6

# தொழுகைக்கு ஆயத்தமாவோம்

يٰٓاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْٓا اِذَا قُمْتُمْ اِلَى الصَّلٰوةِ فَاغْسِلُوْا وُجُوْهَكُمْ وَاَيْدِيَكُمْ
اِلَى الْمَرَافِقِ وَامْسَحُوْا بِرُءُوْسِكُمْ وَاَرْجُلَكُمْ اِلَى الْكَعْبَيْنِ (5:6)

## வுழூ



ஒரு முஸ்லிம் தன் அன்றாட வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் சுத்தத்தைப் பேணி நடக்கக் கடமைப்பட்டுள்ளான்.

தொழுகை, கஃபாவைத் தவாபு செய்தல் போன்ற இபாதத்துக்களை நிறைவேற்றுவதற்கு அடிப்படை நிபந்தனையாகவும் சுத்தம் வலியுறுத்தப் படுகிறது.

தொழுகைக்கு ஆயத்தமாகின்ற ஒருவன் சிறுதொடக்கு, பெருந்தொடக்கு என்பவற்றிலிருந்து நீங்கி சுத்தமாக இருத்தல் வேண்டும். இது தொழுகையின் ஷர்த்துக்களில் ஒன்றாகும்.

சிறுதொடக்கு என்பது வுழூ இல்லாத நிலையாகும்.பெருந்தொடக்கு என்பது குளிப்பதைக் கடமையாக்கியுள்ள சந்தர்ப்பமாகும்.

எனவே சிறுதொடக்கிலிருந்து நீங்குவதற்கு வுழூ செய்தல் வேண்டும். தொழுகையை நிறைவேற்றுவோர் வுழூ எனும் முன்னாயத்தம் செய்வது கடமையாகும். இதைப்பற்றி அல் குர்ஆன் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

**''ஈமான் கொண்டோரே! நீங்கள் தொழுகைக்காகத் தயாராகி விட்டால் உங்களது முகங்களையும் முழங்கை வரையான உங்கள் கைகளையும் கழுவிக் கொள்ளுங்கள். உங்கள் தலைகளையும் 'மஸ்ஹ்' செய்து கொள்ளுங்கள். உங்கள் கால்களையும் கணுக்கால் வரையும் கழுவிக் கொள்ளுங்கள்''. (ஸூரதுல் மாஇதா 05:06)**

*''உங்களில் ஒருவர் வுழூ செய்து கொள்ளும் வரையில் உங்களது தொழுகை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.'' (புகாரி)*

*எனவே தொழுகை ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு வுழூ செய்தல் கட்டாயக் கடமையாகும் என்று தெளிவாகிறது.*

*வுழூ செய்வதனால் அடியார்களது பாவங்கள் மன்னிக்கப் படுகின்றன. இதுபற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிய ஒரு ஹதீஸ் பின்வருமாறு,*

*''வுழூ செய்யும் ஒருவர் வுழூவின் உறுப்புக்கள் ஒவ்வொன்றையும் கழுவும் போது அவற்றிலிருந்து வுழூ செய்த நீர் வடியும் போதே அவ்வுறுப்புக்களால் செய்யப்பட்ட பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன'' (முஅத்தா மாலிக்)*

*நிச்சயமாக வுழூவின் காரணமாக எனது உம்மத்தினர் மறுமையில் முகம் இரு கைகள், இரு கால்கள் பிரகாசம் மிக்கவர்களாக (ஹுர்ரன் முஹஜ்ஜலீன்) எழுப்பப்படுவார்கள். (புகாரி முஸ்லிம்)*

*இத்துணை சிறப்புமிக்க வுழூவை அதன் பர்ளுகள் ஷர்த்துக்களைப் பேணி மேற்கொள்ளும் போதுதான் வுழூ பூரணமடையும். தொழுகையும் ஏற்றுக்கொள்ளப்படும்.*

## தயம்மும்

*தொழுகைக்கான முன்னாயத்தங்களில் சிறுதொடக்கை நீக்க வுழூ செய்தல் கடமை என்பதையும் அது பற்றிய விளக்கங்களையும் ஆறாம் தரத்தில் கற்றோம். அதே போன்று வுழூ செய்ய முடியாத நிலையில் வுழூவுக்குப் பகரமாகத் தயம்மும் என்ற முறையும் உண்டு. இப்பாடத்தில் தயம்மும் பற்றி அறிந்து கொள்வோம்.*



*தயம்மும் என்பது கடமையான குளிப்புக்காகவோ வுழூவுக்காகவோ தண்ணீரைப் பயன்படுத்த முடியாத போது அதற்குப் பதிலாக சுத்தமான மண்ணைப் பயன்படுத்தி முகம் மற்றும் இரு கைகளையும் மஸ்ஹு செய்வதை (தடவுவதை)க் குறிக்கும்*

***தயம்மும் செய்வதற்கான நிபந்தனைகள்:***

1. *சிரமப்பட்டுத் தேடியும் தண்ணீர் கிடைக்காமை*
2. *தண்ணீரை உபயோகிப்பதனால் நோய் ஏற்படலாம் அல்லது நோய் அதிகரிக்கலாம் எனும் நிலை.*
3. *கையிருப்பில் உள்ள நீரைப் பயன்படுத்தினால் அத்தியவசியத் தேவைக்கு நீர் போதாமல் போகும் என்ற நிலை*

*எனவே தண்ணீர் இல்லை என்ற காரணத்துக்காக ஒரு முஸ்லிம் தொழாமலோ சுத்தம் செய்யாமலோ இருக்க முடியாது. மண்ணைப் பயன்படுத்தி தனது கடமையை நிறைவேற்ற வேண்டும் என்பது இஸ்லாத்தின் நிலைப்பாடாகும்.*

*அல் குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது*

''நீங்கள் நோயாளியாகவோ பிரயாணியாகவோ இருக்கும் போது மலம் கழித்தாலோ பெண்களைத் தீண்டினாலோ சுத்தமாக வேண்டிய சந்தர்ப்பத்தில் நீரைப் பெற்றுக் கொள்ளவில்லையாயின் நல்ல

மண்ணைக் கொண்டு உங்கள் முகங்களையும் கைகளையும் தடவிக் கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 4: 43)

### *தயம்மும் செய்யும் முறை*

*நிய்யத்தை மனதில் இருத்திக் கொண்டு ''பிஸ்மில்லாஹ்'' என்று கூறி இரு கைகளையும் சுத்தமான மண்ணில் அழுத்த வேண்டும். பின் இரு உள்ளங் கைகளையும் புறங்கைப் பக்கமாகத் தட்டி முகத்தை மஸ்ஹ் செய்ய வேண்டும். பின்பு மீண்டும் இரு கைகளையும் மண்ணில் அழுத்தி புறங்கைப் பக்கமாகத் தட்டி இரு கைகளையும் முழங்கை வரை மஸ்ஹ் செய்ய வேண்டும்.*

*தயம்மம் செய்பவர் ஒவ்வொரு பர்ளான தொழுகைக்கும் தயம்மும் செய்து கொள்ள வேண்டும். ஆனால் ஒரு முறை செய்த தயம்முமில் பல ஸுன்னத்தான தொழுகைகளை தொழலாம்.*

### *தயம்முமை முறிக்கும் காரியங்கள்*

1. *வுழூவை முறிக்கும் அனைத்து காரியங்களும்.*
2. *தண்ணீரின்றி தயம்மும் செய்து குறிப்பிட்ட தொழுகையைத் தொழுவதற்கு முன்னர் தண்ணீரைப் பெற்றுக் கொள்ளல்.*
3. *நோயின் காரணமாகத் தயம்மும் செய்து தொழுவதற்கு முன் அந்நோய் குணமடைதல்.*

## ஜபீரத்

ஜபீரத் என்பது உடலில் ஏதாவது உறுப்புக்களில் காயம் ஏற்பட்டதற்காகப் போடும் கட்டு (பென்டேஜ் / பிளாஸ்டர்) என்பதாகும்.

இஸ்லாம் எந்தவொரு சந்தர்ப்பத்திலும் தொழுகையை விடுவதற்கு அனுமதிக்கவில்லை. மாறாக சிரமமான சந்தர்ப்பங்களில் சில சலுகைகளை வழங்கியுள்ளது. அந்த வகையில் உடல் உறுப்புக்களில் கட்டு (பென்டேஜ்) போடப்பட்ட ஒருவர் தொழுகையை நிறைவேற்றுவதற்குப் பின்வரும் வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டும்.

- ஜபீரத் (பென்டேஜ் / பிளாஸ்டர்) போடுவதற்கு முன் வுழூ செய்து கொள்ளல்.
- வுழூவின் உறுப்புக்களில் ஜபீரத் போடப்பட்டிருந்தால் ஏனைய உறுப்புக்களில் வுழூ செய்து கொள்வதுடன் ஜபீரத் போடப்பட்ட பகுதியை நீரால் தடவுவதுடன் தயம்முமும் செய்துகொள்ளல்.
- காயம் குணமடைந்து ஜபீரத்தை கழற்றிய பின் வழமை போல் வுழூ செய்து தொழுகையை நிறைவேற்ற வேண்டும்.





## பயிற்சி

1. தயம்மும் என்றால் என்ன?
2. தயம்மும் செய்ய முடியுமான சந்தர்ப்பங்கள் மூன்றைக் குறிப்பிடுக.
3. தயம்முமில் உட்படுத்தப்படும் உறுப்புகள் எவை?
4. ஜபீரத் என்றால் என்ன?
5. சுத்தம் கட்டாயமாகத் தேவைப்படும் மூன்று இபாதத்துக்களைக் குறிப்பிடுக.
6. சிறுதொடக்கு என்றால் என்ன? அதை நீக்குவதற்கு என்ன செய்ய வேண்டும்?
7. பெருந்தொடக்கு என்றால் என்ன? அதைவிட்டு நீங்குவதற்கு என்ன செய்ய வேண்டும்?
8. வுழூ செய்வதால் கிடைக்கும் பயன்களைக் குறிப்பிடுக.

7

# உடற் சுத்தம்

சுத்தம் ஈமானில் பாதியாகும். அல்லாஹ் பரிசுத்தமானவன். முஸ்லிம்கள் சுத்தமாக இருப்பதை அல்லாஹ் விரும்புகிறான். சுத்தமாக வாழ்பவர்கள் மட்டுமே சுவர்க்கம் செல்ல முடியும். ஆரோக்கியமான வாழ்க்கைக்கு அடிப்படையாக விளங்குவது சுத்தமே ஆகும். அசுத்தமானவர்களை மலக்குகள் விரும்புவதில்லை. மனிதர்களும் வெறுக்கிறார்கள்.அவ்வாறே பற்பல நோய்களால் அவர்கள் பீடிக்கப்பட்டு, நோயாளிகளாகக் காலத்தைக் கழிக்க வேண்டியதாகி விடும்.

இஸ்லாம் சுத்தத்திற்கு அதிகூடிய முக்கியத்துவத்தைக் கொடுக்கிறது. முஸ்லிம்கள் தமது உடலையும், ஆடைகளையும், இருக்கும் இடத்தையும் எப்பொழுதும் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு இருப்பதன் மூலம் உள்ளத்திற்குப் புத்துணர்ச்சியும், உடலுக்குப் புதுத்தெம்பும் கிடைக்கிறது. இபாதத்திற்கு அது பேருதவியாகவும் அமைகிறது.



கழுவுதல், குளித்தல், வுழூ செய்தல் என்பன சுத்தம் செய்யும் முறைகளாகும். இதில் கழுவுதல், வுழூ செய்தல் இரண்டையும் கற்றோம். இப்பொழுது குளிப்பு பற்றிப் பார்ப்போம்.

குளிப்பு இரு வகைப்படும்.

★ பர்ழான குளிப்பு ★ ஸுன்னத்தான குளிப்பு

## பர்ழான குளிப்பு

ஜனாபத் (جَنَابَةٌ) (பெருந்தொடக்கு) எனும் நிலைமை ஏற்பட்டு விட்டால் குளிக்க வேண்டியது பர்ழாகும். அவ்வாறான ஆறு சந்தர்ப்பங்கள் உள்ளன.அவற்றை அடுத்த வகுப்புகளில் பார்ப்போம்.

**ஜனாபத் ஏற்பட்டவர்கள் குளிக்கும் வரை பின்வரும் விடயங்களில் ஈடுபடுவது அவர்களுக்குத் தடையாகும்.**

தொழுதல்,கஃபாவைத் தவாபு செய்தல், அல் குர்ஆனைத் தொடுதல், ஓதுதல், சுமத்தல், மஸ்ஜிதினுள் தங்குதல் என்பனவே அவையாகும்.

**ஸுன்னத்தான குளிப்புகள் சில பின்வருமாறு**

ஜும்ஆவுக்காகக் குளித்தல், இரு பெருநாட் தினங்களில் குளித்தல், இஹ்ராமுக்காகக் குளித்தல், கிரகணத் தொழுகைக்காகக் குளித்தல், ஜனாஸா வைக் குளிப்பாட்டியவர் குளித்தல் போன்றனவாகும்.

## குளிப்பு

''நீங்கள் முழுக்குடையவர்களாக இருந்தால் (தேகம் முழுவதையும் கழுவி குளித்து) பரிசுத்தமாகிக் கொள்ளுங்கள்'' (அல் குர்ஆன்-05:06)

''ஒருவர் ஜனாபத் குளியலின் போது ஓர் உரோமத்தின் மீது தண்ணீர் படாது குளித்தாலும் அதற்காக நரகில் துன்புறுவார்.'' (அபூதாவூத்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

குளித்து சுத்தமாக வேண்டும் என்பது இஸ்லாத்தின் கட்டளை யாகும். குளிப்பதற்கு மிகச்சுத்தமான நீர் தேவை. அது அல் மாஉத் தஹூர் (الْمَاءُ الطَّهُوْرُ) என அழைக்கப்படும்.

குளிக்க நாடுபவர் முதலில் சிறுநீர் கழித்து சுத்தம் செய்து கொள்ள வேண்டும். அவ்றத்தை மறைத்து ஆடை அணிந்து கொள்ள வேண்டும். உடலில் அல்லது ஆடையில் படிந்திருக்கும் அசுத்தங்களை நீக்கிக் கழுவிக் கொள்ள வேண்டும். அதன் பின் பூரணமாக வுழுச் செய்து கொள்ள வேண்டும். பின்பு நிய்யத்து வைத்து பிஸ்மில்லாஹ் கூறி குளிக்கத் தொடங்க வேண்டும்.

முதலில் தலைக்கு மூன்று முறையும் பின்பு வலது தோள் பக்கம் மூன்று முறையும், தொடர்ந்து இடது தோள் பக்கம் மூன்று முறையும் தண்ணீரை ஊற்ற வேண்டும்.பின்பு உடலைத் தேய்த்துக் குளிக்க வேண்டும். மூட்டுகளையும், மடிப்புகளையும் நன்கு கவனித்துக் கழுவ வேண்டும். வுழூ செய்யும்போதோ, குளிக்கும் போதோ தண்ணீரை வீண்விரயம் செய்வதைக் கண்டிப்பாகத் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

**‘‘நிச்சயமாக வீண் விரயம் செய்வோர் ஷைத்தானின் சகோதரர்கள் ஆவர்’’ (அல்குர்ஆன் 17:27 )**

குளிர், சளி போன்ற நோய் இல்லாதவர்கள் குளித்து முடிந்த பின் துடைக்காமல் விடுவது ஸுன்னத்தாகும். குளித்து முடிந்த பின்பு வுழூவின் துஆவை ஓதிக் கொள்ள வேண்டும். இவ்வாறு குளித்து சுத்தம் பேணி சுகமாக வாழ்வோம்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. சுத்தமாக இருப்பதன் மூலம் ஏற்படும் நன்மைகள் மூன்று தருக.
2. ஜனாபத் என்றால் என்ன?
3. ஜனாபத்துடையவர்கள் செய்யக்கூடாத மூன்று கருமங்களைத் தருக.
4. குளிப்பதற்கு எவ்வாறான நீரைப் பயன்படுத்த வேண்டும்?
5. குளிக்கும் முறையினை சுருக்கமாகத் தருக.
6. ஸுன்னத்தான குளிப்புக்கள் மூன்றினைக் கூறுக.

# 8

# தொழுகையின் முக்கியத்துவம்

குடும்ப மஜ்லிஸ் என்ற பெயரில் வஸீமின் தகப்பன் வீட்டில் ஒரு வகுப்பை நடாத்தி வந்தார். அது இஷாவின் பின்னர் தொடங்கும். அதில் உம்மா, வாப்பும்மா, வஸீமின் பெரிய நானாமார்களான ஹாதிம், அம்மார் மற்றும் தாத்தாமார்களான ரீஷா, ஸப்ரா என்போர் கலந்துகொள்வது வழக்கம். அன்றும் எல்லோருமாக பாதிஹாவை ஓதி மஜ்லிஸை ஆரம்பித்து வைத்தனர்.

**வாப்பா:** சென்ற மாதம் இபாதத் செய்யத் தயாராகுவோம் என்ற தலைப்பில் வுழூ செய்வது தொடர்பில் பார்த்தோம். இன்று இன்ஷா அல்லாஹ் தொழுகையின் முக்கியத்துவம் பற்றிப் பார்ப்போம்.

**வாப்பும்மா:** மகன்! அது நல்ல தலைப்பு. இப்ப பிள்ளைகள் டியூசன் கிளாஸ், விளையாட்டுப் போட்டி, சுற்றுலா என்று தொழுகையைப் பாழாக்குவது சர்வசாதாரணமாகிவிட்டது.



**வாப்பா:** அதுதான் உம்மா. முன்னைய காலங்கள் போல, இப்போது பாடசாலைகளில் தொழுகையைப் பற்றி வலியுறுத்திச் சொல்லப்படுவது போதாது போலிருக்கிறது.

**வஸீம்:** வாப்பா பாடசாலையிலே நடக்கும் விழாக்களின்போது பலரும் தொழுகை விடயத்தில் பராமுகமாக இருப்பது பற்றி எங்கள் மௌலவி ஆசிரியரும் கவலைப் படுவதைக் கண்டிருக்கிறேன்.

**வாப்பா:** மாணவ பருவத்தில் மரணத்தைப் பற்றிச் சிந்திப்பது குறைவாக உள்ளதால்தான் அவர்கள் தொழுகையில் அசட்டையாக இருக்கின்றார்கள். ஆனால் தொழுகையைப் பற்றித்தான் மறுமையில் முதன்முதலில் விசாரிக்கப்படும் என்பதாக ஹதீஸ்கள் வந்துள்ளன என்பதை அவர்களுக்கு வலியுறுத்த வேண்டும்.

**ரீஷா:** வாப்பும்மா சொன்னதுபோல டியூஷன் கிளாஸ், விளையாட்டுப் போட்டி மற்றும் சுற்றுலா என்பவற்றைக் காரணம் காட்டி தொழுகையிலே அசட்டையாக இருந்தால் மறுமையிலே சிக்கிக்கொள்வோம். அதன் பிறகு மற்ற எல்லாக் கேள்விகளிலும் தப்ப முடியாமல் போகும்.

**உம்மா:** முதல் கோணல் முற்றிலும் கோணல் என்றுதானே ரீஷா சொல்கிறாள்.

**வாப்பா:** ஆம் ரீஷா சொல்வது போல தொழுகை சீராக அமையா விட்டால் மறுமை விடயங்கள் மட்டுமன்றி உலக வாழ்வின் ஏனைய விடயங்களும் சீராக அமையாது.

**அம்மார்** வாப்பா! ஒருவர் இஸ்லாத்தில் நுழைந்தால் அடுத்த கணமே அவருக்குத் தொழுகை கடமையாகிவிடுகிறது அல்லவா?

**வாப்பா:** ஆம் அம்மார்! அந்தளவுக்குத் தொழுகை இஸ்லாத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளது. தொழுகையானது ஒவ்வொருவராலும் நிறைவேற்றியே ஆக வேண்டிய பர்ளு ஐனான கடமையாகும்.

**வாப்பும்மா:** இது ரஜப் மாதம். இதிலேதான் இஸ்ரா (الإِسْرَاءُ), மிஃராஜ் (الْمِعْرَاجُ), சம்பவங்கள் நடந்துள்ளன. மிஃராஜ் பயணத்தின்போது

ஏழாம் வானத்தில் வைத்துத்தான் தொழுகை கடமையாக்கப்பட்டது. இதன் மூலம் தொழுகை எந்தளவு உயர்ந்த அமல் என்பது விளங்குகிறது தானே?

**ஸபீரா:** வாப்பா! வாப்பும்மா சொன்னது போல தொழுகையின் முக்கியத்துவத்தின் காரணமாகத்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனது மரணப் படுக்கையின் போது கூட தொழுகையை வலியுறுத்தினார்கள் என எங்கள் ஆசிரியர் சொல்லித் தந்தார்.

**வாப்பா:** மகளே யுத்த களத்தில் போராடும் சந்தர்ப்பத்திலும் தொழு கையை விடுவதற்கு இஸ்லாம் அனுமதிக்கவில்லை. அதனால்தான் யுத்த வேளையில் போராடியவாறு தொழுகையை நிறைவேற்றும் முறையை அல்குர்ஆன் விபரமாகச் சொல்லித் தந்திருக்கின்றது.

**ஹாதிம்:** இறையச்சமுள்ள நல்லடியார்களுக்குரிய பிரத்தியேக அடை யாளம் என்பதாக அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது. ஸூரா முஃமினூனின் ஆரம்ப பத்து வசனங்கள் குறிப்பிடும் வெற்றி பெறும் விசுவாசிகளின் பண்புகளில் இரண்டு இடங்களில் தொழுகை பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கின்றது அல்லவா?

**வாப்பா:** ஆம் ஹாதிம். அந்த வசனங்களில் முதலில் தொழுகையை விளங்கி, உணர்ந்து பயபக்தியோடு தொழ வேண்டும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஸூரா முஃமினூனின் வசனங்களில் தொழுகையை விடாது தொடராகத் தொழுது வருவதும் வலியுறுத்தப்பட்டுள்ளது. இந்த அம்சங்கள் தொழுகை விடயத்தில் கடைப்பிடிக்கப்படாதபோது அது பொடுபோக் காகக் கருதப்படும். தொழுகையை அசட்டை செய்வதாகவும் அமையும். இறைவனுக்காக அன்றி பிறருக்கு காட்டுவதற்காகத் தொழுவது முகஸ்துதி ஆகும். முகஸ்துதி ஒருவகை ஷிர்க் ஆகும். இத்தகைய தொழுகையாளிகள் நரகம் செல்வதாக ஸூரா மாஊன் குறிப்பிடுகின்றது.

**ஸப்ரா:** தொழுகையை உரிய நேரத்தில் தொழாதவர்களும் இதில் உள்ளடங்குவார்களா?

**வாப்பா:** நிச்சயமாகத் தொழுகையானது விசுவாசிகள் மீது நேரம் குறிக்கப்பட்டதாகும் என்பதாக அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது. தொழுகையை உரிய நேரத்தில் தொழுவதன் மூலம்தான் இம்மையிலும் மறுமையிலும் அளப்பரிய நன்மைகள் கிடைக்கின்றன.

**அம்மார்** வாப்பா! உரிய நேரத்தில் தொழுது வருவதால் எங்களுக்கு நேர முகாமைத்துவப் பயிற்சி கிடைப்பதாக வகுப்பில் வைத்து மௌலவி ஆசிரியர் சொன்னார்.

**வாப்பா:** சரியாகச் சொன்னீர்கள் அம்மார் உரிய நேரத்திற்குச் தொழுது பழகினால் வாழ்வின் ஏனைய விவகாரங்களையும் நேரத்திற்குச் செய்யும் பழக்கம் வந்துவிடும். அதற்கான ஒரேவழி ஐவேளையும் மஸ்ஜிதுக்குச் சென்று ஜமாஅத்தாகத் தொழுவதாகும்.

**ஹாதிம்:** வாப்பா! தனித்துத் தொழுவதைவிட ஜமாஅத்தாக தொழுவது இருபத்தேழு மடங்கு சிறப்பானதாகும் என நபி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறி இருக்கிறார்கள்.

**வாப்பா:** ஜமாஅத்தாகத் தொழுவதன் மூலம் கட்டுக்கோப்பாக வாழப்



பழகலாம். அதன் மூலம் எம்மிடையே ஐக்கியம், சமத்துவம், சகோதரத்துவம், பரஸ்பர அன்பு, சமூக உணர்வு, தலைமைக்குக் கட்டுப்படுதல், கூட்டுச் செயற்பாடு போன்ற பல நல்ல பண்புகள் உருவாகும்.

**வாப்பும்மா:** தொழுது வருவதால்தான் ரிஸ்கில் பரகத் கிடைக்கும். உள்ளத்துக்கு அமைதி கிடைக்கும். முகத்தில் பிரகாசம் ஏற்படும்.

**அம்மார்** தொழுகை நல்லதொரு தேகப் பயிற்சி. தொழுவதால் உடம்புக்கு உற்சாகம் ஏற்படுகின்றது. ஸுப்ஹ் தொழாதவனின் முகத்தை ஷைத்தான் அசிங்கப்படுத்துவான். அதனால் அவன் அன்றைய தினம் உற்சாகம் இழந்து இருப்பான் என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

**வாப்பா:** அது மட்டுமல்ல. யார் ஸுப்ஹ் (பஜ்ர்) தொழுகையை ஜமாஅத்துடன் தொழுகிறாரோ அவர் அன்றைய தினம் அல்லாஹ்வின் பாதுகாப்பில் இருப்பார் என்றும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். மேலும் 'தொழுகையானது வெட்கக் கேடான நடத்தைகளை விட்டும் தீய காரியங்களை விட்டும் (தொழுகையாளிகளைத்) தடுக்கும் என்பதாக அல்குர்ஆன் குறிப்பிட்டுள்ளது. தொழுகையாளிகளாகிய நாம் பாவங்களிலிருந்தும், ஒழுங்கீனமான அநாகரீகமான செயல்களிலிருந்தும் தவிர்ந்துகொள்ள வேண்டும் எனவும் இந்த வசனம் வலியுறுத்துகின்றது.

இந்த வகையில் மஸ்ஜிதில் செருப்புகளை ஒழுங்கீனமாக வைத்தல், பாதையில் சட்டங்களையும் ஒழுங்குகளையும் பேணாமல் நடத்தல், பாடசாலைகளில் ஒழுங்கீனமாக நடத்தல், வீட்டுப் பொருட்களை கண்ட இடங்களில் வைத்தல், அநாகரிகமான ஆடைகளை அணிதல் போன்ற தீய விடயங்களை விட்டும் எங்கள் தொழுகை எங்களைத் தடுக்க வேண்டும். அவ்வாறே சமூகத்தில் காணப்படும் வறுமை, ஏழ்மை, அறியாமை, அக்கிரமம், அநாச்சாரம்,

அநீதி, அதர்மம் போன்றவற்றை எதிர்த்துப் போராடும் மன வலிமையை எங்கள் தொழுகை எங்களுக்குத் தர வேண்டும்.

எனவே நாம் உள்ளச்சத்துடன் தொழ வேண்டும். அல்லாஹ் வின் மீது கொண்ட அன்பின் அடையாளமாகத் தொழுகையை நிலைநாட்ட வேண்டும். அப்போதுதான் தொழுகை ஏற்றுக் கொள்ளப்பட்டதாக அமையும். எனவே தொழுகையில் அதிக கரிசனை செலுத்திப் பேணுதலாகத் தொழுது வருவோம். அஸ்ஸலாம் அலைக்கும்.

***அனைவரும்:*** வஅலைக்குமுஸ் ஸலாம் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு.

## பயிற்சி

**சுருக்கமான விடை தருக.**

1. மறுமையில் முதன்முதலாக விசாரிக்கப்படும் அமல் எது?
2. தொழுகை எந்தச் சந்தர்ப்பத்தில் கடமையாக்கப்பட்டது?
3. முதல் கோணல் முற்றிலும் கோணல் என்று ரீஷா சொன்னதை விளக்குக.
4. பிறருக்குக் காண்பிப்பதற்காகத் தொழுபவர்களது நிலை எவ்வாறிருக்கும்?
5. தொழுவதன் மூலம் நாம் அடையும் பயன்கள் மூன்றைக் குறிப்பிடுக.

# 9

# நோன்பின் முக்கியத்துவம்

شَهْرُ رَمَضَانَ الَّذِىْٓ اُنْزِلَ فِيْهِ الْقُرْاٰنُ هُدًى لِّلنَّاسِ وَ بَيِّنٰتٍ مِّنَ الْهُدٰى
وَالْفُرْقَانِ فَمَنْ شَهِدَ مِنْكُمُ الشَّهْرَ فَلْيَـصُمْهُ ؕ

**''ரமழான் மாதம் எத்தகையது என்றால் அதில்தான் மனிதர்களுக்கு வழிகாட்டியாகவும் நேரான வழியைத் தெளிவாக்கக்கூடியதாகவும் நன்மை தீமையைப் பிரித்தறிவிக்கக்கூடியதாகவும் உள்ள அல்குர்ஆன் அருளப்பெற்றது.ஆகவே உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ அதில் அவர் நோன்பு நோற்கவும்''. (2:185)**

அது ஒரு அழகிய முஸ்லிம் கிராமம். அன்று ஊர் மக்கள் அனைவரிடமும் ஒரு பரபரப்புக் காணப்பட்டது. குழந்தைகள் குதூகலிக்கத் தயாராகிக் கொண்டு, அதற்கான அறிவிப்பை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். ''இன்று தலைப்பிறை தென்பட்டுவிட்டது. நாளை நோன்பு ஆரம்பம்'' என்ற அவ்வறிவிப்பு காதுகளை எட்டியது.

சிறுவர்கள் துள்ளிக் குதித்தனர். எல்லோர் முகங்களிலும் ஒரு வித மகிழ்ச்சி, இனம் புரியாத ஆனந்தம். சகலரும் மஸ்ஜிதுக்குச் சென்றனர். அங்கு இஷாத் தொழுகையைத் தொடர்ந்து, இனிய கிறாஅத்துடன் தறாவீஹ் தொழுகை ஆரம்பமானது.

ஏற்கனவே அறிவித்தபடி தறாவீஹ் தொழுகையின் பின் விசேட பயான் இடம் பெற்றது. பயானை செவிமடுக்கச் சகலரும் நெருங்கி அமர்ந்தனர். ''நோன்பின் முக்கியத்துவம்'' என்ற தலைப்பில் பயான் சுவாரஸ்யமாக ஆரம்பமானது. பயானின் முக்கிய பகுதிகள் இவ்வாறு அமைந்தன.

இஸ்லாத்தின் அடிப்படைக் கடமைகளில் நோன்பு நான்காவதாகும். இது அரபியில் 'அஸ்ஸவ்ம்' எனப்படும். இது ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டு கடமையாக்கப்பட்டது.

பாட ஆரம்பத்தில் கூறப்பட்டுள்ள ஸூரா பகராவின் 185 ஆம் வசனம் **ரமழான் ஒரு சிறப்பான மாதமாகும், அதில் நோன்பு நோற்பது கடமையாகும்** என்பதைத் தெளிவுபடுத்துகிறது. இவ்வாறே பல ஹதீஸ்களும் நோன்பை வலியுறுத்துகின்றன. **அல்லாஹ்வுக்காக நோன்பிருக்கிறேன் என்ற நிய்யத்து வைத்தலும், ஸஹர் முதல் இப்தார் வரை நோன்பை முறிக்கும் காரியங்களில் ஈடுபடாது தவிர்ந்திருத்தலுமே நோன்பின் இரண்டும் பர்ளுகளுமாகும்.**

ரமழானில் புரியப்படும் முக்கியமான இபாதத் நோன்பாகும். அதற்கு ஏராளமான நன்மைகள் வழங்கப்படும். ''நோன்பு எனக்குரியது அதற்குரிய கூலியை நானே வழங்குவேன்'' (முஸ்லிம்) என அல்லாஹ் கூறுவதாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறியுள்ளார்கள்.

நோன்பு சிறந்ததொரு வணக்கமாகும். அது அல்லாஹ்வின் நெருக்கத்தைப் பெற்றுத் தருகிறது. ஷைத்தானை விட்டும் தூரமாக்கிவிடுகிறது. சுவர்க்கத்தை நெருக்கமாக்கி வைக்கிறது.நரகத்தை வெகு தூரமாக்கி விடுகிறது. ''ரமழான் மாதம் வந்து விட்டால் சுவர்க்கத்தின் வாயில்கள் திறந்து விடப்படுகின்றன. நரகத்தின் வாயில்கள் மூடப்படுகின்றன'' (புகாரி-முஸ்லிம்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

முஸ்லிமான பருவ வயதை அடைந்த, நோன்பு நோற்கச் சக்தியுள்ள ஆண், பெண் இரு பாலார் மீதும் நோன்பு நோற்பது கடமையாகும். எனினும் பயணிகள், நோயளிகள், வயோதிபர்கள், கர்ப்பிணிப் பெண்கள், பாலூட்டும் தாய்மார்கள், மாதவிடாய் ஏற்பட்ட பெண்கள் போன்றோருக்கு நோன்பில் சலுகைகள் வழங்கப்பட்டுள்ளன.

''உங்களில் யாரேனும் பயணத்திலோ, நோயாளிகளாகவோ இருந்தால் வேறு நாட்களில் அதை (நோன்பை) நோற்கட்டும்.''(2:184)

சுவர்க்கத்திற்குப் பல வாயில்கள் உள்ளன. அதில் ஒரு விசேட வாயிலுக்கு 'அர்ரய்யான்' என்று பெயர். அவ்வாயில் வழியாக நோன்பாளிகள் மட்டுமே பிரவேசிக்க முடியும். வேறு எவரும் பிரவேசிக்க முடியாது. ஆரோக்கியமான இவ்வுலக வாழ்வுக்கும், இன்பம் நிறைந்த மறு உலக சுவன வாழ்விற்கும் நோன்பு ஒரு வரப்பிரசாதம் ஆகும்.

நோன்பாளிகளிளுக்கு ஸஹர், இப்தார் ஆகிய இரு சந்தர்ப்பங்கள் கிடைக்கப் பெற்றுள்ளன. இவ்விரு வேளைகளிலும் உணவுப் பண்டங்களை உண்பதுடன் மாத்திரம் நிறுத்திக் கொள்ளாது, துஆக்களில் ஈடுபடுவதும் மிக முக்கியமானதாகும். ''நோன்பாளிக்கு நோன்பு துறக்கும் நேரத்தில் மறுக்கப்படாத பிரார்த்தனை ஒன்றுள்ளது'' (இப்னுமாஜா)என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

அல்லாஹ்வின் கட்டளைக்காகவே நோன்பை நோற்க வேண்டும். நோன்பு நோற்பதன் மூலம் அடியார்கள் அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தை எதிர் பார்க்கின்றனர். அல்லாஹ்வும் தன் திருப்தியை அடியார்களுக்கு வழங்குகிறான். அவனின் திருப்தி கிடைத்துவிட்டால் அதை விடப் பெரும் பேறு வேறு எதுவும் கிடையாது. அதனை நோன்பின் மூலமாக அடைந்து கொள்ள முடியும்.

''நோன்பாளிக்கு இரு மகிழ்ச்சிகள் இருக்கின்றன. ஒன்று நோன்பு துறக்கும் போது ஏற்படும் மகிழ்ச்சியாகும். மற்றையது தனது ரப்பை சந்திக்கும் போது ஏற்படும் மட்டற்ற மகிழ்ச்சியாகும்'' (புகாரி முஸ்லிம்) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்.

நோன்பின் மூலம் இறை சிந்தனை, மனக்கட்டுப்பாடு, பொறுமை, சகிப்புத்தன்மை, வறிய மக்கள் மீது அனுதாபம், இபாதத்களில் ஆர்வம், பாவங்களைவிட்டும் தூரமாதல், பரோபகாரம் போன்ற நற்குணங்கள் உருவாகின்றன. நோன்பு பல நோய்களுக்கு நிவாரணமளிக்கும் சஞ்சீவி யாகும் என மருத்துவர்கள் கூறுகின்றனர்.

ரமழான் மாதத்தின் அதி உயர் சிறப்பு ''லைலதுல் கத்ர்'' எனும் ஒரு மகத்துவமான இரவாகும். அது ஆயிரம் மாதங்களை விடவும் மேன்மை யானது. அவ்விரவின் நற்பாக்கியங்களை அடைவதற்காக நபி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், ஸஹாபாக்களும் மஸ்ஜிதில் ''இஃதிகாப்'' இருந்து வந்துள்ளார்கள். அவ்விரவைத் தவற விடக்கூடா தென்பதே அதன் நோக்கமாகும். இதுவும் ரமழானில் மேற்கொள்ளப்பட வேண்டிய ஒரு முக்கிய இபாதத் ஆகும்.

ரமழானில் நோன்பு நோற்பது பர்ளாகும். அவ்வாறே, ஸுன்னத்தான நோன்புகளும் இருக்கின்றன. வாராந்தம் திங்கள், வியாழன், மாதாந்தம் பிறை 13,14,15, வருடாந்தம் ஆஷூறா, தாஸூஆ, ஷவ்வாலின் ஆறு நாட்கள், துல் ஹஜ் பிறை ஒன்று முதல் எட்டு வரையான நாட்கள் யவ்முல் அறபா, போன்றவையே அவையாகும்.

சில நாட்களில் நோன்பு நோற்பது தடை செய்யப்பட்டுள்ளது.(ஷக்கு) சந்தேகத்திற்குரிய நாள், இரு பெருநாட்கள், அய்யாமுத் தஷ்ரீக்குடைய மூன்று நாட்கள் என்பதே அவையாகும். இவ்வாறு பயான் தொடர்ந்தது.

எனவே, ரமழான் மாதத்தில் பேணுதலாக நோன்பை நோற்று, இஃதிகாப் இருந்து, லைலதுல் கத்ரையும் அடைந்து, அல்லாஹ்வின் பொருத்தத்தைப் பெறுவோம்.

### பயிற்சி

**இடை வெளிகளை நிரப்புக.**

1. ரமழானில் ஒவ்வொரு முஸ்லிமும் ........................ கட்டளையிடப்பட்டுள்ளான்.
2. பருவ வயதை அடைந்த ........................ இருபாலார் மீதும் ரமழானின் நோன்பு கடமையாகும்.
3. அல் குர்ஆன் ............................. பிரித்தறிவிக்கக் கூடியதாக அருளப்பட்டது.
4. ரமழானில் .................... அவர்களும் .................... மஸ்ஜிதில் இஃதிகாப் இருந்து வந்துள்ளனர்.
5. யாரேனும் ...................., ........................ இருந்தால் வேறு நாட்களில் நோன்பை நோற்கட்டும்.
6. நோன்பாளிகள் ............... அர்ரய்யான் என்ற .................. உள்ளே நுழைவர்.
7. நோன்பு பிடிக்கும் நேரம் ...................... என்றும், துறக்கும் நேரம் ..................... என்றும் கூறப்படும்.
8. ..................... இரவு ஆயிரம் ................. விடவும் மேன்மையானது.
9. வாராந்த ஸுன்னத்தான நோன்புகள் .................., ................ ஆகிய நாட்களில் நோற்கப்படும்.
10. நோன்பு நோற்பது ................, ................. ஆகிய நாட்களில் தடை செய்யப்பட்டுள்ளது.

10

# துஆவும் திக்ரும்

## துஆ

நாம் பல்வேறு தேவைகளுடனும் ஆசைகளுடனும் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம். அதேவேளை அன்றாடம் பல பிரச்சினைகளையும் கஷ்டங்களையும் சந்திக்கின்றோம். எமது ஆசைகள் நிறைவேறவும் பிரச்சினைகள் துன்பங்கள் நீங்கவும் என்ன செய்யலாம்? யாரிடம் முறையிடலாம்?

ஆம்! நாம் வாழும் இவ்வுலகையும் எம்மையும் படைத்தவன் சர்வ வல்லமை மிக்க அந்த அல்லாஹ். அவன்தான் எமது விருப்பு வெறுப்புகளை அறிந்தவன். எனவே அவனிடம் மாத்திரமே முறையிடலாம். எமது தேவைகளை அவனிடமே கேட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

''அல்லாஹ் எவ்விதத் தேவையுமற்றவன்; நீங்கள் தேவை உடையவராக இருக்கின்றீர்கள்......'' (47 : 38)



வாழ்வின் பல்வேறு சந்தர்ப்பங்களில் பல்வேறு தேவைகளுக்காகப் பிரார்த்திப்பதை ''துஆ'' என அழைப்போம். நாம் அல்லாஹ்விடம் மாத்திரமே பிரார்ர்த்திப்போம். அவன் மாத்திரமே எமது தேவைகளை நிறைவேற்றக்கூடியவன்.

**''உன்னையே வணங்குகிறோம் உன்னிடமே உதவி தேடுகிறோம்'' (1:05)**

**''நீங்கள் என்னை அழையுங்கள் நான் உங்களுக்குப் பதிலளிக் கின்றேன்'' (40:60) என அல்லாஹ் கூறுகின்றான்.**

நாம் அல்லாஹ் மீது ஆழ்ந்த நம்பிக்கை வைத்துள்ளோம். இதன் வெளிப்பாடாகவே எமது பிரார்த்தனைகள் அமைகின்றன. எனவே பிரார்த்தனை என்பது ஓர் உயர்தரமான வணக்கமாகும்.

''பிரார்த்திப்பது இறை வணக்கமாகும்'' (திர்மிதி)

வணக்கங்கள் அல்லாஹ்வுக்கு மாத்திரமே நிறைவேற்றப்பட வேண்டும். எனவே அல்லாஹ்விடம் மாத்திரமே பிரார்த்திப்போம்.

**''அல்லாஹ்வுடன் வேறு எந்த இறைவனையும் அழைத்து பிரார்த் திக்க வேண்டாம். அவ்வாறு பிரார்த்தித்து அழைத்தால் அதனால் நீர் வேதனை செய்யப்படுபவர்களில் (உள்ளவராக) ஆகிவிடுவீர் '' (26:213)**

எமது பிரார்த்தனைகள் அங்கீகரிக்கப்பட சில நிபந்தனைகள் காணப்படுகின்றன. அவற்றை அறிந்து நாம் எமது பிரார்த்தனைகளில் பின்பற்ற வேண்டும். அவை

- அல்லாஹ்விடம் மாத்திரமே பிரார்த்தித்தல்.
- அல்லாஹ் தனது பிரார்த்தனைக்கு பதிலளிப்பான் என்ற உறுதியுடன் பிரார்த்தித்தல்.
- எல்லா விவகாரங்களிலும் ஹலாலைப் பேணுதல்.
- உறவுகளைத் துண்டிக்காதிருத்தல்.
- நல்ல காரியங்களுக்காகப் பிரார்த்தித்தல்.
- பதிலுக்கு அவசரப்படாதிருத்தல்.

இஸ்லாம் எல்லா விடயங்களிலும் ஒழுங்குகளையும் வழிமுறைகளை யும் வகுத்துத் தந்துள்ளது. அந்தவகையில் பிரார்த்திப்பவர் பின்பற்ற வேண்டிய சில ஒழுங்குகளை நோக்குவோம்.

- பிரார்த்தனையின் ஆரம்பத்திலும் இறுதியிலும் அல்லாஹ்வைப் புகழுதலும் நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது ஸலவாத்துச் சொல்லுதலும்.
- உள்ளச்சத்துடனும் பணிவுடனும் மன்றாடிப் பிரார்த்தித்தல்.
- இக்லாஸுடனும் விருப்புடனும் பிரார்த்தித்தல்.
- மிஸ்வாக் செய்து வுழூவுடனும் தூய்மையுடனும் பிரார்த்தித்தல்.
- குரலைத் தாழ்த்தி இரு கைகளையும் உயர்த்திப் பிரார்த்தித்தல்.
- பிரார்த்திக்குமுன் நற்செயலொன்றைப் புரிதல்.
- தான் செய்த நற்செயலை முன்னிறுத்திப் பிரார்த்தித்தல்.
- பிரார்த்தனைகள் அங்கீகரிக்கப்படக்கூடிய விஷேட இடங்கள், நேரம், சந்தர்ப்பங்களை அனுசரித்துப் பிரார்த்தித்தல்.

மனிதன் இயல்பாகவே பாவம் செய்யக்கூடியவன். அவன் தான் செய்த பாவத்தை உணர்ந்து அதிலிருந்து விடுபடும் நோக்கில் பிரார்த்திப்ப தாயின் அவன்

- தான் செய்து வந்த பாவத்தை விட்டும் முற்றுமுழுதாக நீங்க வேண்டும்.
- ஒரு மனிதனுடன் தொடர்புபட்ட பாவமாக இருந்தால் உரிய மனிதனிடம் முதலில் மன்னிப்புக் கோர வேண்டும்.
- செய்த பாவத்தை எண்ணி வருந்திப் பிரார்த்திக்க வேண்டும்.

அல்லாஹ் அல்-குர்ஆனில் பிரார்த்திக்குமாறு கற்றுத்தந்த வசனங்களை நாம் மனனமிடுவோம். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல அவர்களின் பிரார்த்தனைகளைக் கற்றுக்கொள்வோம். அவற்றைக் கொண்டு பிரார்த்திக்க முயல்வோம். நிச்சயமாக அல்லாஹ் எமது பிரார்த்த னைகளுக்குப் பதிலளிப்பான் அல்லது மறுமையில் அவற்றை எமக்காக சேமித்து வைப்பான். அல்லது எமது பிரார்த்தனைகளின் அளவுக்குத் தீமையைவிட்டும் தடுப்பான் என்ற உணர்வோடு பிரார்த்திப்போம். சர்வ வல்லமைமிக்க கருணையாளனாகிய அல்லாஹ் எமது தேவைகளை நிறைவேற்றித்தர எதிர்பாத்துக்கொண்டிருக்கின்றான்.

## திக்ர்

*''திக்ர்'' என்பது அல்லாஹ்வை நினைவுகூருவதாகும். ஒரு முஃமின் இம்மையிலும் மறுமையிலும் ஈடேற்றம் பெறுவதற்கு திக்ர் இன்றியமையாததாகும். எனவேதான் அல்குர்ஆனும் ஸுன்னாவும் அதிகமாக திக்ர் செய்வதனை வலியுறுத்துகின்றன.*

**''விசுவாசிகளே நீங்கள் அல்லாஹ்வை அதிகம் நினைவுருங்கள், காலையிலும் மாலையிலும் அவனைத் துதி செய்யுங்கள்'' (33: 41-42)**

*''எனது அடியான் என்னைப் பற்றி நினைக்கும்போது நான் அவனுடன் இருக்கின்றேன். அவன் என்னைப் பற்றி நினைத்தால் நானும் அவனைப் பற்றி நினைக்கின்றேன். பலர் மத்தியில் அவன் என்னைப் பற்றி நினைத்தால் அவர்களைவிடச் சிறந்தவர்கள் மத்தியில் நான் அவனை நினைக்கின்றேன்'' என அல்லாஹ் கூறுவதாக ஹதீஸுல் குத்ஸியில் வந்துள்ளது.*

*''உமது நாவு தொடர்ந்தும் அல்லாஹ்வை நினைவுகூருவதில் நனைந்தவாறிருக்கட்டும்''*

*★ அல்-குர்ஆனும் ஹதீஸும் திக்ர் செய்யாதோரைக் கண்டிக்கின்றன.*

**''அல்லாஹ்வின் திக்ரை விட்டும் விலகி எவர்களது உள்ளங்கள் கடினமாகிவிட்டனவோ, அவர்களுக்குக் கேடுதான். இத்தகையோர் தெளிவான வழிகேட்டில் இருக்கின்றனர்'' (39:22)**

*நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திக்ர் செய்யாதவனை உயிரற்ற மனிதனுக்கு உவமித்தார்கள்.*

*''தனது இரட்சகனை ஞாபகப்படுத்துபவனும் ஞாபகப் படுத்தாதவனும் உயிருள்ளவனையும் உயிரற்றவனையும் போன்றவர்கள் ஆவர்'' (புஹாரி)*

**திக்ர் இருவகைப்படும்**

*1. திக்ர் கல்பீ*

*2. திக்ர் லிஸானீ*

*திக்ர் கல்பீ என்பது உள்ளத்தால் அல்லாஹ்வை நினைவுபடுத்துவதாகும். திக்ர் லிஸானீ என்பது நாவினால் மொழிந்து அல்லாஹ்வை நினைவு படுத்துவதாகும். திக்ர் என்பது வாழ்வின் எல்லா சந்தர்ப்பங்களிலும் இடம்பெறல் வேண்டும்.*

‘‘(அறிவுடைய அவர்கள்) நின்ற நிலையிலும் இருந்த நிலையிலும் தங்கள் விலாப்புறங்களின் மீது சாய்ந்த நிலையிலும் அல்லாஹ்வை நினைவுபடுத்துவார்கள்’’ (3:191) என அல்குர்ஆன் விபரிக்கின்றது.

ஒரு முஃமின் அல்லாஹ்வின் நினைவுடனேயே வாழ வேண்டும் என்பதற்காக இஸ்லாம் பல வழிமுறைகளை ஏற்படுத்தியுள்ளது. அவற்றுள் சில:

**1. தொழுகை, நோன்பு, ஸகாத், ஹஜ் போன்ற வணக்கவழிபாடுகள்**

‘‘என்னை நினைவுபடுத்தற்காக தொழுகையை நிலைநாட்டுவீராக’’ (20:14)

**2. திலாவதுல் குர்ஆன்**

‘‘எவருடைய உள்ளத்தில் அல்-குர்ஆனின் ஒரு சில பகுதியேனும் இல்லையோ அவரது உள்ளம் பாழடைந்த வீட்டிற்கு ஒப்பானதாகும்.’’ (திர்மிதி)

**3. சந்தர்ப்ப துஆக்கள்**

உண்ணல், உறங்கல், ஆடை அணிதல், ஆடை மாற்றுதல், வீட்டினுள் நுழைதல், வீட்டிலிருந்து வெளியேறல், பிரயாணம் செய்தல், காலை மாலை திக்ர்கள் போன்ற குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் ஓத வேண்டிய துஆக்களையும் திக்ர்களையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல அவர்கள் ஓதிக்காட்டியுள்ளார்கள்.



**4. பொதுவான திக்ருகள்.**

''நாவுக்கு இலகுவான இரு வார்த்ததைகள். அவை நன்மை தீமை நிறுக்கும் தராசில் பாரமானவை. அருளாளனுக்கு மிகவும் விருப்பமானவை''

سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ سُبْحَانَ اللهِ العَظِيْم

பொருள் : அல்லாஹ் மிகத் தூய்மையானவன் அவனைப் புகழ்ந்து துதிக்கிறேன். மகத்துவமிக்க அல்லாஹ் தூய்மையானவன் (புஹாரி)

''நான்கு வார்த்தைகள். அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானவை, அவை

سُبْحَانَ اللهِ والحَمْدُ لِله ولآ اِلهَ الاَّ اللهُ واللهُ أَكْبَرَ

பொருள் : அல்லாஹ் மிகத் தூய்மையானவன், அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே, அவனைத்தவிர வேறு கடவுள் இல்லை, அல்லாஹ் மிகப்பெரியவன்.

**5. தவ்பா**

''அல்லாஹ்வின் மீது ஆணையாக! நிச்சயமாக நான் ஒரு நாளில் எழுபது தடவைகளுக்கும் அதிகமாக அல்லாஹ்விடம் பிழைபொறுக்க வேண்டுகின்றேன். அவனிடம் தவ்பா செய்து மீளுகின்றேன்'' (புஹாரி).

**6. ஸலவாத்துச் சொல்லுதல்.**

''நிச்சயமாக அல்லாஹ்வும் அவனுடைய மலக்குகளும் நபியின் மீது ஸலவாத் சொல்கிறார்கள். முஃமின்களே நீங்களும் அவர் மீது ஸலவாத்து சொல்லி அவர் மீது ஸலாமும் சொல்லுங்கள்.'' (33:56)

**7. துஆக்கள்**

பல்வேறு சந்தர்ப்பங்களில் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்வதன் மூலம் அல்லாஹ் பற்றிய சிந்தனையுடன் வாழ முடியும்.

ஒருவர் தனிமையாகவோ கூட்டாகவோ திக்ர் செய்ய முடியும். திக்ர் செய்யும்போது உடல், உடை, இடம் என்பன சுத்தமாக இருப்பது விரும்பத்தக்கது. அவ்வாறே இறையச்சத்துடனும் பணிவுடனும் மன ஒருமைப்பாட்டுடனும் அமைதியாகவும் திக்ர் செய்ய வேண்டும்.

திக்ர் செய்வதன் மூலம் உள்ளங்கள் அமைதி அடைகின்றன, இம்மை, மறுமையில் வெற்றியும் கிடைக்கின்றது என அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது.

''அறிந்துகொள்ளுங்கள் அல்லாஹ்வை திக்ர் செய்வதன் மூலமே உள்ளங்கள் அமைதி பெறுகின்றன'' (13:28).

''அல்லாஹ்வை அதிகம் திக்ர் செய்யுங்கள் நீங்கள் வெற்றி பெறுவீர்கள்'' (62:10).

எனவே நாம் நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல அவர்கள் போதித்த திக்ர்களைக் கற்று, மனனமிட்டு எல்லா நிலைமைகளிலும் ஓதி வாழ்வில் வெற்றிபெறுவோம்.

## பயிற்சி

*(1) பின்வரும் கூற்றுக்கள் சரியாயின் (√) எனவும் பிழையாயின் (✕) எனவும் அடையாளமிடுக.*

1. பிரார்த்தனை செய்வது ஒரு வணக்கமாகும். ( )
2. உறவுகளைத் துண்டித்தவர்களின் பிரார்த்தனைகளுக்கு அல்லாஹ் பதிலளிக்கமாட்டான். ( )
3. பிரார்த்தனைகளின் ஆரம்பத்திலும் முடிவிலும் அல்லாஹ்வைப் புகழ வேண்டும். ( )
4. பிரார்த்திப்பவர் அல்லாஹ்வின் பதிலுக்கு அவசரப்பட வேண்டும். ( )

*(2) பின்வரும் வினாக்களுக்கு சுருக்க விடை தருக.*

1. ''திக்ர்'' என்றால் என்ன?
2. திக்ரின் இரு வகைகளையும் குறிப்பிடுக.
3. திக்ர் செய்பவரையும் திக்ர் செய்யாதவரையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எவ்வாறு உவமித்துக் கூறினார்கள்?
4. திக்ரின் மூலம் கிடைக்கும் பயன்கள் ஐந்து தருக.
5. நீர் ஓதிவரும் சந்தர்ப்ப துஆ ஒன்றை அரபியில் எழுதுக.

# 11

# நல்ல நட்பு

اَلْأَخِلَّاءُ يَوْمَئِذٍ بَعْضُهُمْ لِبَعْضٍ عَدُوٌّ إِلَّا الْمُتَّقِيْنَ

''உற்ற நண்பர்களாக இருந்தோரில் (இறைவனை) அஞ்சி வாழ்ந்தோரைத் தவிர (மற்றவர்கள்) அந்நாளில் ஒருவருக்கொருவர் பகைவர்களாக இருப்பார்கள்'' (43:67)

ஒரு மனிதனின் வாழ்வில் தாக்கம் செலுத்தக்கூடிய மிகப் பிரதான அம்சமாக நட்பு காணப்படுகின்றது. இஸ்லாம் நட்புக்குக் கூடிய முக்கியத்துவம் கொடுத்துள்ளது. அது பற்றி அதிகம் பேசியுள்ளது. இஸ்லாம் காட்டித்தந்தவாறு நட்பு அமையும் போது, அது அல்லாஹ்வின் அன்பையும் அருளையும் பெற்றுத்தரும். அதற்கு மாற்றமாக அமையும் நட்பானது உலகில் பல்வேறு பிரச்சினைகளையும் துன்பங்களையும் தேடித்தரும். மறுமையில் அல்லாஹ்வின் கோபத்தையும் தண்டனையையும் பெற்றுத்தரும்.



★ **இஸ்லாம் விரும்பும் நட்பு பின்வரும் அடிப்படைகளின் மீது அமைய வேண்டும்.**

### நட்பு கொள்ளப்படுபவன் இறை விசுவாசியாக இருத்தல்

''இறை விசுவாசியான ஒருவரையே உங்களது தோழனாக ஆக்கிக் கொள்ளுங்கள்'' (அபூ தாவுத்)

### அல்லாஹ்வுக்காக நேசித்தல்

ஈமானின் இனிமையைச் சுவைக்கும் பாக்கியம் பெற்ற நல்ல முஃமினின் பண்பு களில் ஒன்று: ''அவன் நேசித்தால் அல் லாஹ்வுக்காகவே நேசிப்பான். வெறுத்தால் அல்லாஹ்வுக்காகவே வெறுப்பான்.'' (முஸ்லிம்)

### இறையச்சம் காணப்படுதல்

''உற்ற நண்பர்களாக இருந்தோரில் (இறைவனை) அஞ்சி வாழ்ந்தோரைத் தவிர (மற்றவர்கள்) அந்நாளில் ஒருவருக்கொருவர் பகைவர்களாக இருப்பார்கள்'' (43:67)



### நன்னடத்தை காணப்படுதல்

''தன் நண்பர்களிடத்தில் மிகச்சி றந்தவனே அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்தவன் ஆவான்'' (திர்மிதி)

### நன்மையை ஏவித் தீமையைத் தடுத்தல்

ஸஹாபாக்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும்போது, ''நாம் எமது ஈமானைப் புதுப்பித்துக்கொள்வோம்'' ''அடுத்தவர்கள் கவனயீனமாக இருக்கும் இந்நாளில் நாம் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோருவோம்'' போன்ற வார்த்தைகளைக் கூறி சக நண்பரை நன்மையின்பால் தூண்டக் கூடியவர்களாக இருந்தார்கள்.

**நட்பு நீடித்து நிலைக்க சில வழிமுறைகளை இஸ்லாம் காட்டித் தந்துள்ளது.**

**1. நண்பனை முழுமையாகப் புரிந்துகொள்ளல்.**

''ஒரு மனிதன் இன்னொரு மனிதனுடன் நட்புக் கொண்டால் அவரது பெயர், தந்தையின் பெயர், வம்சாவழி போன்றவற்றை வினவி அறிந்து கொள்ளட்டும். இது அவர்களுக்கிடையில் நட்பு நிலைக்க வழிசெய்யும்.'' (திர்மிதி)

**2. நட்பை வெளிப்படுத்தல்.**

''உங்களில் ஒருவர் தன் சகோதரன் மீது நட்புக்கொண்டால் தான் அவர் மீது நட்புக்கொள்வதைத் தெரிவிக்கட்டும்.'' (அஹ்மத்)

**3. அன்பளிப்புகளைப் பரிமாறுதல்.**

''அன்பளிப்புகளைப் பரிமாறிக்கொள்ளுங்கள். அது அன்பை அதிகரிக்கும்.'' (புஹாரி)

**4. வாழ்த்துக் கூறல், முஸாபஹா (கைலாகு), முஆனகா (ஆரத் தழுவுதல்) செய்தல்.**

ஒரு முஃமினின் உயர் இலட்சியம் அல்லாஹ்வின் திருப்தியைப் பெறவேண்டும் என்பதாகும். நல்ல நட்பு இதற்குச் சிறந்த வாய்ப்பாக அமைகிறது.

## சிறந்த நட்பின் பயன்கள்

- மறுமையில் நிழலே இல்லாத மஹ்ஷரில் இந்த நட்பு எமக்கு நிழல் பெற்றுத்தரும்.

''எனது மாட்சிமை மீது அன்பு செலுத்துபவர்கள் எங்கே? வேறு நிழலே இல்லாத அந்நாளில்; நான் அவர்களுக்கு நிழல் கொடுப்பேன்.'' (அஹ்மத்)

- அல்லாஹ்வுக்காக நேசித்தோர் மறுமையில் உயர் அந்தஸ்த்தைப் பெறுவர்

''அல்லாஹ்வின் அடியார்களில் சிலர் இருப்பர். அவர்கள் இறைத் தூதர்களுமல்லர். ஷுஹதாக்களுமல்லர். ஆனால் அல்லாஹ்விடம் அவர்கள் பெறுகின்ற உயர் கண்ணியத்தினைக் கண்டு இறைத்தூதர்களும் ஷுஹதாக்களும்கூட பொறாமைப்படுவர். அவர்கள்தான்அல்லாஹ்வுக்காக ஒருவரையெருவர் நேசித்தவர்கள் (அஹ்மத்)

- நட்பு எமது ஆளுமையில் செல்வாக்குச் செலுத்தும்

நல்ல நண்பர்களுடனான உறவு எமக்கு நன்மை பயக்கும் அதே வேளை மோசமான நட்பு எமக்கு தீமையையே கொண்டுவரும்.

''நல்ல நண்பனுக்கும் கெட்ட நண்பனுக்கும் உதாரணம் கஸ்தூரி வியாபாரியையும் கொல்லனையும் ஒத்ததாகும். கஸ்தூரி வியாபாரி உன்மீது அதனைத் தடவி விடலாம், அல்லது அதிலிருந்து கொஞ்சம் நீ வாங்கிக் கொள்ளலாம், அல்லது அதன் நறுமணத்தையாவது நீ நுகரலாம். கொல்லனின் சூழையிலிருந்து வரும் தீப்பொறிகள் உனது ஆடையை எரித்து விடலாம். அல்லது அதன் புகை உன் மூக்கை உறுத்தலாம்'' (புஹாரி)

- தீய நட்பு இழிவைத் தரும்

இஸ்லாமிய வழிமுறைக்கு மாற்றமான நட்பு உலகில் பாதிப்புக்களை ஏற்படுத்துவது போலவே மறுமையிலும் இழிவையும் துன்பத்தையுமே பெற்றுத் தரும்.

**''எனக்கு வந்த கேடே! (என்னை வழிகெடுத்தவனை) நண்பனாக ஆக்கிக் கொள்ளாது இருந்திருக்க வேண்டாமா? நிச்சயமாக என்னிடம் நல்லுபதேசம் வந்த பின்னரும் அதிலிருந்து அவன் என்னை வழி கெடுத்தானே!'' (25:28-29)** என நண்பனால் வழிகெடுக்கப்பட்டவன் கவலையும் கைசேதமும் அடைவான்.

ஒரு முஸ்லிம் தனது மறுமை வாழ்வை இலக்காகக் கொண்டு நல்ல நட்பைக் கட்டியெழுப்ப வேண்டும். ஆசிரியர்கள், ஆலிம்கள், அறிஞர்கள் போன்றோருடன் நல்லுறவைக் கட்டியெழுப்பி அவர்களிடமிருந்து சிறந்த முன்மாதிரிகளைக் கற்றுப் பின்பற்ற வேண்டும். அவ்வாறே அல்குர்ஆன் ஓதுதல், கற்றல், ஸுன்னத்தான தொழுகைகள், நோன்புகள், திக்ர் அவ்ராத்கள் போன்ற ஸாலிஹான அமல்களையும் தனது நட்புக்குரியவையாக ஆக்கிக் கொள்ள வேண்டும். மேலும் நல்ல நூல்கள், சஞ்சிகைகளை வாசித்தல், பயன்மிக்க பொழுதுபோக்குகளில் ஈடுபடல், ஆரோக்கியத்தை வளர்க்கும் உடற்பயிற்சிகளில் ஈடுபடல் போன்ற செயற்பாடுகளையும் தனக்கு நட்புக் குரியவையாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

### பயிற்சி

அடைப்புக்குறிக்குள் தரப்பட்டுள்ளவற்றைக் கொண்டு பின்வரும் வாக்கியங்களைப் பூரணப்படுத்துக.

1. நல்ல நண்பனுக்கு உதாரணம் ................................
2. அல்லாஹ்வுக்காக நேசம் கொண்டோர் ................................
3. அன்பளிப்புக்களைப் பரிமாறிக் கொள்ளல் .........................
4. தூய நட்பின் காரணமாக சாதாரண மனிதன் அல்லாஹ்விடம் அடையும் அந்தஸ்தைப் பார்த்து ............................
5. எமது நல்லமல்கள் எமக்கு மறுமையில் ............................

(நட்பை வளர்க்கும், சிபாரிசு செய்யும், கஸ்தூரி வியாபாரியாவார், நபிமார்களும் பொறாமைப் படுவார்கள், மறுமையில் நிழல் பெறுவார்)

12

# பிறருக்கு உதவுவோம்

وَتَعَاوَنُوْا عَلَى الْبِرِّ وَالتَّقْوٰى وَلَا تَعَاوَنُوْا عَلَى الْاِثْمِ وَالْعُدْوَانِ

''இன்னும் நன்மையிலும் பயபக்தியிலும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளுங்கள்; பாவத்திலும், பகைமையிலும் நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ள வேண்டாம்'' (5:2)

*அல்லாஹுத்தஆலா இவ்வுலகையும் அதிலுள்ள அனைத்தையும் சில நியதிகளின் அடிப்படையில் படைத்து நிருவகிக்கின்றான். எல்லா உயிரினங்களையும் ஒன்றில் ஒன்று தங்கி வாழும் ஒழுங்கில் படைத்துள்ளான். மனிதனை மிக உன்னதமான படைப்பாகப் படைத்துள்ளான். உலகில் சிறந்த சமூகமொன்றைத் தோற்றுவிக்கத் தேவையான வழிகாட்டல்களை வழங்கியுள்ளான். இந்த இறை வழிகாட்டலே இஸ்லாம் மார்க்கமாகும்.*

*இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட ஒவ்வொருவரும் மனித சமூகத்தின் உயர்ச்சிக்காகவும் முன்னேற்றத்திற்காகவும் உழைக்க வேண்டும் என இஸ்லாம் வலியுறுத்துகின்றது.*



*இதனை இப்பாடத்தின் ஆரம்பத்தில் உள்ள அல்குர்ஆன் வசனம் (5:2) சுட்டிக் காட்டுகின்றது.*

*ஒரு முஃமினின் அனைத்து செயற்பாடுகளும் அடுத்தவருக்குப் பயனளிப்பதாக அமைய வேண்டும். அவன் தனக்காக மட்டும் வாழாமல் பிறருக்காகவும் வாழ வேண்டும். அப்போதுதான் அவனது வாழ்வு அர்த்தமுள்ளதாக அமையும்.*

*''மனிதர்களுக்கு அதிகம் பயனளிப்பவரே மனிதர்களில் சிறந்த வராவார் '' (பைஹகி ) என்ற ஹதீஸ் ஒரு முஸ்லிம் இன மத குல நிற வேறுபாடுகளுக்கு அப்பால் சமூகத்திற்குப் பயனுள்ள ஒருவனாக இருக்க வேண்டும் என்பதை உணர்த்துகின்றது.*

*மக்களுக்குப் பிரயோசனமானவனே அல்லாஹ்வுக்கு மிக விருப்ப மானவனாவான். ஒரு முஸ்லிமின் உள்ளத்தில் சந்தோஷத்தை ஏற்படுத்துவது அவனைவிட்டும் ஒரு கஷ்டத்தை நீக்குவது அவனது கடனை அடைப்பது, மானத்தைக் காப்பது, நன்மையை ஏவித் தீமையைத் தடுப்பது, பாதையிலுள்ள தீங்கு தரும் பொருட்களை அகற்றுவது, குருடர் செவிடர் ஊமையர் போன்றோருக்கு உதவுவது, தாகத்தோடு இருப்பவருக்கு நீர் புகட்டுவது, பசித்தவருக்கு உணவளிப்பது, பலவீனர்களுக்குத் தோள் கொடுப்பது போன்ற யாவும் அல்லாஹ்வின் அன்பைப் பெற்றுத்தரும் செயல்களாகும்.*

*''தான் விரும்புவதைத் தன் சகோதரனுக்கும் விரும்பாதவரை உங்களில் எவரும் உண்மை விசுவாசியாக மாட்டார்.'' (புஹாரி, முஸ்லிம்)*

*ஒரு சமூகத்திலுள்ள அநாதைகள், விதவைகள், அங்கவீனர்கள், ஏழைகள், பெண்கள், சிறியோர், முதியோர் போன்ற பலவீனர்கள் பாதுகாக்கப்பட வேண்டும். அவர்களுடன் அன்போடும் கருணையோடும் நடந்துகொள்ள வேண்டும். அவர்களைத் தாழ்வாகவோ சுமையாகவோ எண்ணக்கூடாது. அவர்கள் அல்லாஹ்விடத்தில் கண்ணியத்திற்குரியவர்கள்.*

''மேலும், அல்லாஹ்வையே வழிபடுங்கள் : அவனுடன் எதனையும் இணை வைக்காதீர்கள். மேலும், தாய் தந்தையருக்கும், நெருங்கிய உற வினர்களுக்கும், அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், அண்டை வீட்டி லுள்ள உறவினர்களுக்கும், அருகிலுள்ள அண்டை வீட்டாருக்கும், (பிரயாணம், தொழில் போன்றவற்றில்) கூட்டாளிகளாக இருப் போருக்கும், வழிப்போக்கர்களுக்கும், உங்களிடமுள்ள அடிமைகளுக்கும் அன்புடன் உபகாரம் செய்யுங்கள் ; நிச்சயமாக அல்லாஹ் கர்வமுடை

யோராக, வீண் பெருமை உடையோராக இருப்பவர்களை நேசிப்ப தில்லை.'' (அல் குர்ஆன் 4:36 )

*நீங்கள் உதவி செய்யப்படுவதும் இரணம் அளிக்கப்படுவதும் உங்களில் உள்ள பலவீனர்களின் காரணமாகத்தான் (அபூ தாவுத்)*

*அல் குர்ஆன் பல இடங்களில் இபாதத் செய்யுமாறு கூறிவிட்டு நல்ல காரியங்களைச் செய்யுங்கள் எனவும் கூறுகின்றது.*

''ஈமான் கொண்டவர்களே! நீங்கள் ருகூஉ செய்யுங்கள் ஸுஜூது செய்யுங்கள். உங்கள் இறைவனை வணங்குங்கள். நல்ல காரியங்களில் ஈடுபடுங்கள். நீங்கள் வெற்றி பெறுவீர்கள்.'' (அல் குர்ஆன் 22:77)

''தீர்ப்பு நாளைப் பொய்யெனக் கருதியவனைப் பார்த்தீரா? அவன் அநாதையை விரட்டுகிறான். ஏழைக்கு உணவளிக்க அவன் தூண்டுவ தில்லை.'' (அல் குர்ஆன் 107:1-3)

*வணக்க வழிபாடுகளில் ஈடுபடுவது போலவே சமூகத்தில் காணப் படும் பலவீனர்களுக்காகப் பாடுபடுவதும் கடமையாகும். ஒன்றைவிட்டு இன்னொன்றை மாத்திரம் செய்தால் ஒருபோதும் மறுமையில் வெற்றி யடைய முடியாது. இஸ்லாமிய சமூகத்திலுள்ள எந்த ஓர் அங்கத்தவரும் கைவிடப்படக்கூடாது.*



அனைவருடைய இன்ப துன்பங்களிலும் பங்குகொள்ள வேண்டும். இதன் மூலமே சமூகத்தின் கட்டுக்கோப்பும் உறுதிப்பாடும் பேணப்படும். எனவேதான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முஸ்லிம் சமூகத்தை ஓர் உடலுக்கு ஒப்பிட்டுக்கூறினார்கள்.

''பரஸ்பரம் அன்புகொள்வதிலும் கருணை காட்டுவதிலும் முஸ்லிம்கள் ஒரே உடலை ஒத்தவர்கள். அதில் ஓர் உறுப்பு நோய் வாய்ப்பட்டால் ஏனைய உறுப்புகளும் விழித்திருந்து வருத்திக்கொண்டு அக்கஷ்டத்தில் பங்கெடுக்கின்றன.'' (புஹாரி,முஸ்லிம்)

''ஒரு முஸ்லிம் மற்ற முஸ்லிமின் சகோதரர் ஆவார். அவர் மற்றவருக்கு அநீதி இழைக்கமாட்டார். அவரை ஆதரவற்றவராக விட்டு விட மாட்டார்'' (புஹாரி, முஸ்லிம்)

ஒரு முஸ்லிம் அடுத்த சகோதரனுக்கு பயனுள்ளவனாக வாழும்போது அவனது உள்ளம் விரிவடைகின்றது. பேராசை நீங்குகின்றது. அல்லாஹ்வின் அன்பும் அருளும் கிடைக்கின்றது. மறுமையின் கஷ்டங்கள் நீங்குகின்றன.

''யார் ஒரு முஸ்லிமின் கஷ்டத்தைப் போக்கி அவரை மகிழ்விக்கின்றாரோ, அல்லாஹ் கியாமத் நாளின் கஷ்டங்களில் ஒன்றை அவரை விட்டும் போக்கி அவரை மகிழ்விப்பான்'' (புஹாரி, முஸ்லிம்)

### பயிற்சி

1. முஸ்லிம்கள் வேறுபாடற்ற நிலையில் பிறருக்கு உதவ வேண்டும் என்பதை எடுத்துக்காட்டும் ஹதீஸைக் குறிப்பிடுக.
2. மக்களுக்குப் பயனுள்ளவராக வாழ்வது தொடர்பாக ஐந்து உதாரணங்களை எடுத்துக்காட்டுக.
3. சமூகத்தால் பராமரிக்கப்பட வேண்டிய நலிவுற்றோரின் பட்டியல் ஒன்றைத் தருக.
4. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முஸ்லிம் சமூகத்தை உடலின் உறுப்புகளுக்கு உவமித்திருந்தமைக்கான காரணங்களைக் குறிப்பிடுக.

13

# பிறர் பொருட்களை அனுமதியுடன் பயன்படுத்துவோம்

يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تَدْخُلُوْا بُيُوْتًا غَيْرَ بُيُوْتِكُمْ حَتّٰى تَسْتَاْنِسُوْا وَتُسَلِّمُوْا عَلٰٓى اَهْلِهَا ذٰ لِكُمْ خَيْرٌ لَّكُمْ لَعَلَّكُمْ تَذَكَّرُوْنَ

ஈமான் கொண்டவர்களே! உங்கள் வீடுகளல்லாத (வேறு) வீடுகளில், அ(வ்வீட்டிலுள்ள)வர்களிடம் அனுமதி பெற்று, அவர்களுக்கு ஸலாம் சொல்லாதவரை (அவற்றினுள்) பிரவேசிக்காதீர்கள் - (அவ்வாறு நடப்பதுவே) உங்களுக்கு நன்மையாகும்; நீங்கள் நற்போதனை பெறுவதற்கு (இது உங்களுக்குக் கூறப்படுகிறது). (24:27)

சைய்யாப், ஆமிர் ஆகிய இருவரும் நல்ல நண்பர்கள். தவறாமல் பாடசாலைக்குச் செல்வார்கள். வகுப்பறைச் செயற்பாடுகளில் இவர்கள் இருவரும் முன்னிலை வகிப்பவர்கள். சைய்யாப், தனது தந்தைக்குச் சுகவீனம் காரணமாக அவருக்கு ஒத்தாசை புரிவதற்காக அன்று பாடசாலைக்குச் செல்லவில்லை. தனது நண்பன் பாடசாலைக்கு வராமை ஆமிருக்குக் கவலையாக இருந்தது. தாயிடம் விடயத்தைக் கூறிவிட்டு, ஆமிர் சைய்யாபின் வீட்டுக்குச் சென்றான். வீட்டின் கதவு ஓரளவு திறந்திருந்தது. ஆமிர் உள்ளே நுழையவில்லை. வாசலை விட்டு விலகி நின்று உள்ளே கேட்கும்படி மூன்று முறை ஸலாம் கூறினான். பதில் ஏதும் வரவில்லை. யாரும் வெளியே வராததைக் கண்டு வீட்டில் நுழையாது திரும்பிச் செல்லத் தயாரானான். அப்போது ஒரு குரல் சத்தமாக ஒலித்தது.

***சைய்யாப்:*** அஸ்ஸலாமு அலைக்கும். ஆமிர் ஏன் வீட்டிற்கு வந்து உள்ளே வராமல் திரும்பிப் போகிறீர்கள்?

***ஆமிர்:*** வஅலைக்கும் ஸலாம். உங்களுக்கு ஸலாம் கூறினேன். வீட்டிற்குள் இருந்து பதில் ஏதும் வரவில்லை அதுதான் திரும்பிச் செல்லத் தயாரானேன்.

**சையயாப்:** என்ன இன்றைக்குப் புதிதாக சொல்கிறீர்கள். நீங்கள் எப்போதும் எங்களது வீட்டுக்கு வந்தால் ஸலாம் சொல்லிக்கொண்டு உடனே உள்ளே வருவீர்கள் தானே அவ்வாறே வந்திருக்கலாமே.

**ஆமிர்:** சையயாப்! இன்று இஸ்லாம் பாடத்தில் நான் இதனைக் கற்றுக் கொண்டேன். பிறரின் வீடுகளுக்குச் சென்றால் நாம் கட்டாயமாக ஸலாம் கூறி மூன்று முறை அனுமதியைக் கோர வேண்டும். அனுமதி கிடைக்காத சந்தர்ப்பத்தில் திரும்பிச் சென்றுவிடவேண்டும் என ஆசிரியர் கற்றுத் தந்தார். அதனைத்தான் நான் இப்போது கடைப்பிடித்தேன். ஒரு விடயத்தைக் கற்ற பின்பு அதனை நடைமுறைப்படுத்தாமல் இருப்பது பாவமல்லவா?

**சையயாப்:** ஆம்!! நல்ல விடயத்தினைச் சொல்லித் தந்தீர்கள்.

**ஆமிர்:** ஏன் நீங்கள் இன்று பாடசாலைக்கு வரவில்லை என்று அறியவே நான் இங்கு வந்தேன்.

**சையயாப்:** இன்று காலையில் வாப்பாவிற்கு திடீரென சுகமில்லாமல் போய்விட்டது. அவருக்குத் துணையாக வைத்தியசாலைக்குச் சென்றேன். இப்போது அவர் சுகமாக இருக்கிறார். அல்ஹம்துலில்லாஹ்.

**ஆமிர்:** உங்கள் தந்தைக்கு அல்லாஹ் சுகத்தைக் கொடுப்பானாக!

**சையயாப்:** நீங்கள் வந்தது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. இன்று இஸ்லாம் பாடத்தில் என்ன பாடம் படித்தீர்கள்?

**ஆமிர்:** பிறர் பொருட்களை அனுமதியுடன் பயன்படுத்தல், பிறரது வீடுகளுக்கு அனுமதியுடன் செல்லுதல் தொடர்பாகக் கற்றுத் தந்தார். எங்களது அன்றாட வாழ்வில் எம்மை அறியாமல் நடைபெறுகின்ற அதிகமான விடயங்கள் தொடர்பான விளக்கங்களைக் கற்றுக் கொண்டோம்.

**சையயாப்:** பிறர் பொருட்களை நாம் பயன்படுத்தும்போது எப்போதும் அனுமதியுடன் பயன்படுத்த வேண்டுமா?



**ஆமிர்:** எமது வீடு, பாடசாலை, வகுப்பறை எங்கிருந்தாலும் நாம் பிறரது பொருட்களை அனுமதியுடன்தான் பயன்படுத்த வேண்டும். அவ்வாறு அனுமதியின்றி பயன்படுத்துவது ஹராமானதாகும். ஏனெனில் நாம் பிறருடைய பொருட்களை அனுமதியின்றி பயன்படுத்தும்போது அதனால் பல மோசமான விளைவுகள் ஏற்படுகின்றன. சிலபோது நண்பர் உறவினர்களுக்கிடையில் பகைமையும் ஏற்படுகிறது. எனவேதான் பிறர்பொருட்களைப் பயன்படுத்தும் விடயத்தில் இஸ்லாம் மிக அவதானமாக நடந்துகொள்ளுமாறு குறிப்பிட்டிருக்கிறது என ஆசிரியர் ஆதாரங்களுடன் விளக்கினார்.

**சைய்யாப்:** ஆம்! கடந்த வாரம் எமது மாலைநேர வகுப்பறையில் அவ்வாறானதொரு சம்பவம் இடம்பெற்றது. ரலீன் என்பவருடைய பேனையை அவருடைய அனுமதியில்லாமல் எடுத்த வஸீம் அதனைப் பக்கத்து வகுப்பில் உள்ள றிபாத் என்பவருக்குக் கொடுத்தார். ஆனால் அவர் அனுமதி பெறவும் இல்லை. அவரிடம் அதுபற்றி எதுவும் சொல்லவும் இல்லை. இதனால் ரலீன் கோபமைடந்து ஆசிரியரிடம் முறையிட, ஆசிரியர் அதனைப் பகிரங்கமாக வினவ முழு வகுப்பறையும் குழம்பி கற்பித்தல் நடவடிக்கைககள் தடைப்பட்டன. அது

மட்டுமன்றி நெருக்கமான நண்பர்களாக இருந்த ரலீனும் வஸீமும் பேசுவதையும் நிறுத்திக்கொண்டார்கள்.

**ஆமிர்:** இஸ்லாம் பாட ஆசிரியரும் இவ்வாறு வகுப்பறை, வீட்டுச் சூழல் என்பவற்றில் நடக்கின்ற இவ்வாறான சம்பவங்கள் பலவற்றைக் குறிப்பிட்டார். அனுமதியின்றி ஒருவருடைய பொருளை எடுப்பதனால் குரோதம் வளரும், கோபம் ஏற்படும், தப்பெண்ணம் ஏற்படும், ஒருவர் மற்றொருவர் மீது சந்தேகம் கொள்வர், உறவுகளில் விரிசல் ஏற்படும், அமைதியின்மையும் குழப்பமான சூழலும் தோன்றும். எனவே, சிறிய பொருளா யினும் உரிய நபரின் அனுமதியுடன்தான் அவற்றைப் பயன்படுத்த வேண்டும். குறித்த ஒரு பொருளை அவசரத் தேவையொன்றிற்காக எடுக்க நேரிட்டால் அதனை வேலை முடிந்த பின்னரேனும் உரிய நபருக்கு தெரிவித்துவிட வேண்டும். அவ்வாறு செய்யவில்லையாயின் அது திருட்டுக்கு ஒப்பானது என ஆசிரியர் விளக்கினார்.

**சைய்யாப்:** எமது நெருக்கமான உறவினர், நண்பர்களின் வீடுகளுக்குச் சென்றாலும் உள்நுழைவதற்கு அனுமதி வேண்டுமா?

**ஆமிர்:** நாம் யாருடைய வீட்டுக்குச் சென்றாலும் ஸலாம் கூறி அனுமதியினைப் பெற்றுக்கொள்ள வேண்டும். மூன்று முறை அனுமதி கேட்டும் கிடைக்கவில்லையாயின் நாம் திரும்பி விட வேண்டும் என்பதே இஸ்லாம் கூறியிருக்கும் சட்ட ஒழுங்காகும்.

**சைய்யாப்:** ஆசிரியர் இதற்கு ஏதாவது வரலாற்று ஆதாரங்களை குறிப்பிட்டாரா?

**ஆமிர்:** ஆம், இதற்கு ஆசிரியர் அல்குர்ஆனிலிருந்தும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்விலிருந்தும் அழகிய முன்மாதிரிகளைக் குறிப்பிட்டார்.

''விசுவாம் கொண்டோரே! உங்கள் வீடுகள் அல்லாத வேறு வீடுகளில் நீங்கள் நுழைய அவசியம் ஏற்பட்டால் அவ்வீடு களில் உள்ளவர்களிடம் நீங்கள் அனுமதி கோரி அவ்வீடுகளில் உள்ளோருக்கு ஸலாம் கூறாத வரை (அவற்றில்) நுழைய வேண்டாம்'' (அந்நூர் : 27)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்...) அவர்கள் ''உங்களில் ஒருவர் மூன்று முறை அனுமதி கேட்டும் அவருக்கு அனுமதி வழங்கப்படாவிட்டால் அவர் திரும்பி விடட்டும்'' என்று கூறியுள்ளார்கள். (புகாரி)

**சைய்யாப்:** நாம் ஒரு பொருளை வீதியிலோ அல்லது பொது இடம் ஒன்றிலோ கண்டெடுத்தால் அதனை அனுமதியில்லாமல் பயன்படுத்த முடியுமா? இது தொடர்பாக ஆசிரியர் விளக்கம் தந்தாரா?

**ஆமிர்:** ஆம். இது தொடர்பாகவும் சிறந்த விளக்கங்களை ஆசிரியர் குறிப்பிட்டார், நாம் ஒரு பொருளை பொது இடத்தில் கண்டெடுத்தால் அதனை அவ்விடத்திலேயே விட்டு விட வேண்டும். அல்லது அதன் உரிமையாளரைக் கண்டுபிடித்து அதனை ஒப்படைக்க வேண்டும்.

**சைய்யாப்:** ஜஸாகல்லாஹு ஹைறன் உங்களது வருகையின் மூலம் நான் நிறைய விடயங்களைக் கற்றுக்கொண்டேன். நாமும் எமது வாழ்வில் அவற்றை எடுத்து நடப்போம். இன்ஷா அல்லாஹ்.

## பயிற்சி

1. எமக்குச் சொந்தமில்லாத பொருளைக் கையாள வேண்டியேற் பட்டால் எவ்வாறான வழிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதைச் சுருக்கமாகக் கூறுக.
2. பிறர் பொருளை அனுமதியின்றி பயன்படுத்துவதால் ஏற்படும் விளைவுகளைப் பட்டியற்படுத்துக.
3. பொது இடங்களில் கண்டெடுக்கப்படும் பொருள்களை என்ன செய்ய வேண்டும் என்பதைக் குறிப்பிடுக.
4. பிறர் வீட்டினுள் நுழையும்போது கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்குகளை வரிசைப்படுத்துக.

## 14

# அல்லாஹ்வின் வேதங்கள்

وَالَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِمَآ اُنْزِلَ اِلَيْكَ وَمَآ اُنْزِلَ مِنْ قَبْلِكَ
وَبِالْاٰخِرَةِ هُمْ يُوْقِنُوْنَ (2 :4)



அல்லாஹ் மனிதர்களுக்கு வழிகாட்டுவதற்காக அருளியவையே வேதங்களாகும். இவ்வேதங்களை ஒரு முஸ்லிம் நம்பிக்கை கொள்வதனூடாகவே அவனது ஈமான் பூரணப்படுத்தப்படுகின்றது. வேதங்கள், ஸுஹுபுகள் பற்றி நம்பிக்கை கொள்வதை முஸ்லிமின் பண்புகளில் ஒன்றாக அல்குர்ஆன் சுட்டிக்காட்டுகின்றது.

‘‘(முஹம்மதே) உமக்கு அருளப்பட்ட (இவ்வேதத்)தையும், உமக்கு முன் அருளப்பட்டதையும் அவர்கள் நம்புவார்கள். மறுமையையும் உறுதியாக நம்புவார்கள்’’ (2:4)

அல்லாஹ் அருளிய வேதங்களாக அல்குர்ஆனில் குறிப்பிடப் பட்டுள்ளவற்றின் எண்ணிக்கை நான்காகும். அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு கால சூழ்நிலைகளுக்கு ஏற்ப வெவ்வேறு நபிமார்களுக்கு வெவ்வேறு மொழிகளில் அருளப்பெற்றன.

இவ்வேதங்களையும் நபிமார்களின் பெயர்களையும் அவை இறக்கப் பட்ட மொழிகளையும் நாம் பின்வருமாறு பாடல் ஒன்றின் மூலம் காண்பிக்கலாம்.

| | | |
|---|---|---|
| தௌராத் | மூஸா | அபராணி |
| ஸபூர் | தாவூத் | யூனானி |
| இன்ஜீல் | ஈஸா | ஸுர்யானி |
| புர்கான் | முஹம்மத் | அரபானி |

அதே சமயம் ஸுஹுபுகளும் மனித வாழ்வுக்கு வழிகாட்டுபவையாக அமைந்தன. ''ஸுஹுபுகள்'' என்பது ஆகமம் (இறை கட்டளைகள்) ஆகும். ஸுஹுபுகள் கொடுக்கப்பட்ட நபிமார்கள் மற்றும் அவர்களுக்கு வழங்கப்பட்ட ஸுஹுபுகளின் எண்ணிக்கை பின்வருமாறு.

| | |
|---|---|
| ஆதம் அலைஹிஸ்ஸலாம் | 10 ஸுஹுபுகள் |
| ஷீத் அலைஹிஸ்ஸலாம் | 50 ஸுஹுபுகள் |
| இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் | 30 ஸுஹுபுகள் |
| மூஸா அலைஹிஸ்ஸலாம் | 10 ஸுஹுபுகள் |
| இப்ராஹிம் அலைஹிஸ்ஸலாம் | 10 ஸுஹுபுகள் |

நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வேதமும் ஸுஹுபுகளும் வழங்கப்பட்டுள்ளன. எல்லா வேதங்களும், ஸஹுபுகளும் لا إله إلا الله என்ற ஓர் இறைக் கொள்கையைப் போதித்து மனித வாழ்வுக்கு வழிகாட்டுவனவாக அமைந்தன. இறுதி வேதமாகிய அல் குர்ஆன் வாழ்க்கைக்குத் தேவையான அனைத்துப் போதனைகளையும் சட்டதிட்டங்களையும் உள்ளடக்கி இஸ்லாத்தைப் பூரணப்படுத்தியது.

அல்குர்ஆன் தவிர்ந்த ஏனைய வேதங்கள் அல்லாஹ்வினால் அருளப்பட்ட அமைப்பிலோ அதன் மூல வடிவிலோ தற்போது இல்லை. அவை மனிதர்களின் கரங்களால் திரிபுபடுத்தப்பட்டுள்ளன. ஆனால் இறுதி வேதமாகிய அல்குர்ஆன் எத்தகைய திரிபுகளுக்கும், மாற்றங்களுக்கும் உட்படவில்லை. இறுதி நாள் வரை அதனைப் பாதுகாக்கும் பொறுப்பை அல்லாஹ் ஏற்றுள்ளான்.

''நிச்சயமாக நாமே அல்குர்ஆனை அருளினோம். நாமே அதனைப் பாதுகாப்போம்'' (15:9)

முந்திய வேதங்கள் அருளப்பட்ட மொழிகள் இன்று வழக்கொழிந் துள்ளன. ஆனால் இறுதி வேதமான அல்குர்ஆனின் மொழி வாழ்ந்து கொண்டேயிருக்கின்றது. அம்மொழியைக் கோடிக்கணக்கான மக்கள் பயன் படுத்தியும் வருகின்றனர்.

அல்குர்ஆன் அல்லாஹ்விடமிருந்து படிப்படியாக அருளப்பட்டு வந்த கலாமாகும். அதில் எதுவித முன்பின் முரண்பாடுகளோ, பொருத்த மின்மைகளோ காணப்படுவதில்லை. அழகிய ஓசை நயத்துடன், படிக்காத வர்களும் புரிந்து கொள்ளும் மொழிநடையில் அருளப்பட்டுள்ள அல்குர்ஆன் உலகத்துக்காக இறக்கப்பட்ட பொது மறையாகும். அது, நடைமுறைச் சாத்தியமானது. இறுதி வேதமான அல்குர்ஆனை விசுவாசிப்பதும் அதனைப் பின்பற்றி வாழ்வதும் எமது கடமையாகும்.

### பயிற்சி

பின்வரும் கூற்றுக்களுக்கு சரி பிழை அடையாளமிடுக.

1. அல்குர்ஆன் அல்லாஹ்வின் கலாமாகும். ( )
2. இன்ஜீல் வேதம் அதன் தூய வடிவில் பாதுகாக்கப்பட்டுள்ளது. ( )
3. ஸபூர் வேதம் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வழங்கப்பட்டது. ( )
4. வாழ்வின் சில துறைகளுக்கு மாத்திரமே அல்குர்ஆன் வழிகாட்டுகிறது. ( )
5. வேதங்கள் அருளப்பட்ட மொழிகளுள் சுர்யாணி மொழி வழக்கிலுள்ளது. ( )
6. மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மாத்திரமே வேதமும் ஸுஹுபுகளும் வழங்கப்பட்டன. ( )

# 15

# ஸூரா அல் கத்ர்


سُوْرَةُ الْقَدْرِ مَكِّيَّةٌ وَّهِيَ خَمْسُ اٰيَاتٍ

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

اِنَّآ اَنْزَلْنٰهُ فِيْ لَيْلَةِ الْقَدْرِ ۝١ وَمَآ اَدْرٰىكَ مَا لَيْلَةُ الْقَدْرِ ۝٢ لَيْلَةُ

الْقَدْرِ ۙ خَيْرٌ مِّنْ اَلْفِ شَهْرٍ ۝٣ تَنَزَّلُ الْمَلٰٓئِكَةُ وَالرُّوْحُ فِيْهَا

بِاِذْنِ رَبِّهِمْ ۚ مِنْ كُلِّ اَمْرٍ ۝٤ سَلٰمٌ ۛ هِيَ حَتّٰى مَطْلَعِ الْفَجْرِ ۝٥

ஸூரா அல் கத்ர் அல்குர்ஆனின் 97 ஆவது அத்தியாயமாகும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மக்கா வாழ்க்கைப் பகுதியில் இறக்கப்பட்டதால் மக்கீ ஸூராவாகக் கொள்ளப்படுகின்றது. ஐந்து ஆயத்துக்களைக் கொண்ட இந்த ஸூரா குறிப்பிட்ட விடயங்கள் பற்றிய கருத்தை முன்வைக்கும் ஒரு சிறிய ஸூராவாக உள்ளது.

இந்த ஸூராவின் பொருள் பின்வருமாறு அமைகிறது.

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தைக் கொண்டு ஆரம்பம் செய்கின்றேன்

1. நிச்சயமாக நாம் தான் இந்த குர்ஆனை (மிகக் கண்ணியமுள்ள) லைலதுல் கத்ர் என்னும் ஓர் இரவில் இறக்கி வைத்தோம்.

2. நபியே இந்தக் கண்ணியமுள்ள இரவின் மகிமையை நீங்கள் அறிவீர்களா?

3. கண்ணியமுள்ள அந்த இரவு ஆயிரம் மாதங்களைவிட மிக்க மேலானதாகும்.

4. அதில் மலக்குகளும் (ஜிப்ரீல் ஆகிய) றூஹும் தங்கள் இறைவனின் கட்டளையின் பேரில் (நடைபெற வேண்டிய) எல்லாக் காரியங்களுடன் இறங்குகின்றனர்.

5. ஈடேற்றம் உண்டாகுக. (அவ்விரவின் இச்சிறப்பு) விடியற்காலை உதயமாகும் வரை (நீடிக்கும்)

இங்கு இரண்டு விடயங்கள் முன்வைக்கப்படுகின்றன.

*(1). அல் குர்ஆன் லைலதுல் கத்ர் எனும் இரவில் இறக்கப்பட்டமை*

*(2). லைலதுல் கத்ர் என்ற இரவின் கண்ணியம்*

**முதல் கருத்தை,** ஸூரா பகராவின் கீழ்வரும் வசனம் தெளிவுபடுத்துகின்றது.

*''ரமழான் மாதம் எத்தகைய (மகத்துவமுடைய) தென்றால் அதில்தான் மனிதர்களுக்கு நேர்வழிகாட்டும் அல்குர்ஆன் (எனும் வேதம்) இறக்கப்பட்டது. அது (நன்மை - தீமையை) பிரித்தறிவித்து நேரான வழியைத் தெளிவாக்கக் கூடிய வசனங்களை உள்ளடக்கியதாகவும் உள்ளது.(2:185)*

**இரண்டாவது கருத்தை** முதல் கருத்துடன் இணைத்து ஸூரா அத்துகானின் பின்வரும் வசனம் சுட்டிக்காட்டுகின்றது.

*''ஹாமீம். தெளிவான இவ்வேதத்தின் மீது சத்தியமாக, நிச்சயமாக இதனை மிக்க பாக்கியமுள்ள (லைலதுல் கத்ர் என்ற) ஓர் இரவில் (முதல் முறையாக) இறக்கி வைத்தோம். நிச்சயமாக நாம் (இதன் மூலம்) அச்சமூட்டி எச்சரிக்கை செய்கிறோம். உறுதியாக எல்லாக் காரியங்களும் அதில்தான் நம்முடைய கட்டளைப்படி (நிர்மாணிக்கப்பட்டு) பிரித்துக் கொடுக்கப்படுகின்றன (44:1-4).*

லைலதுல் கத்ர் எனப்படும் இரவு, எந்த நாளிரவைச் சுட்டிக்காட்டுகிறது என்பதைத் திட்டமாக அறிய முடியவில்லை. அதனை அறிவிப்பதற்காக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்

முன்வந்த போது இரு நபர்கள் சச்சரவில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். இதனால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அது மறக்கடிக்கப்பட்டது. எனவே, ''இது உங்களுக்கு நன்மையாக இருக்கும். இதனை ரமழான் மாதத்தின் 21,23,25,27,29 ஆகிய ஒற்றைப்படை இரவுகளில் தேடுங்கள் (புகாரி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். ரமழானின் கடைசிப் பத்து இரவுகள், அதிலும் ஒற்றையான இரவுகள் அல்லது ரமழானின் ஏதாவதோர் இரவு எனப் பல கருத்துக்கள் உள்ளன. ஆதலால் ரமழான் முழுதும் அதனை எதிர்பார்த்துச் செயற்படுவதே அறிவுடைமையாகும்.

''எவர் மாட்சிமை மிக்க இரவில் நம்பிக்கையுடனும் ஆர்வத்துடனும் வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டாரோ அவரது முந்திய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன'' (புகாரி) என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். ''அல்லாஹ்வின் தூதரே, நான் லைலதுல் கத்ரை அடைந்து கொண்டால் என்ன செய்ய வேண்டும்'' என ஒருவர் கேட்ட போது ' اللّٰهُمَّ إِنَّكَ عَفُوٌّ تُحِبُّ الْعَفْوَ فَاعْفُ عَنِّي ''இறைவா, நீ மன்னிப்பவன், மன்னிப்புக் கேட்பதை விரும்புபவன், எனவே என்னுடைய பாவங்களை மன்னித்தருள்வாயாக'' (திர்மிதி - அஹ்மத்) எனக் கூறும்படி பதிலளித்தார்கள்.

அதுமட்டுமன்றி ரமழானின் கடைசிப் பத்தை அடைந்துவிட்டால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலக விவகாரங்களிலிருந்து சற்று ஒதுங்கி இரவைத் தொழுகை, இஃதிகாப் முதலான வணக்கங்களைக் கொண்டு உயிர்ப்பிப்பார்கள். குடும்பத்தவர்களையும் அதன்பால் தூண்டிவிடுவார்கள்.

'லைல்' என்பது இரவு என்ற கருத்தையும், கத்ர் என்பது தீர்மானித்தல், திட்டமிடுதல், மகத்துவம், பொறுமை என்ற கருத்துக்களையும் தருகின்றன. எனவே இவ்விரவில் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களும், ஏனைய மலக்குகளும் அல்லாஹ்வின் திட்டத்துடனும், தீர்மானங்களுடனும் பூமிக்கு இறங்குகின்றனர். 'மின் குல்லி அம்ரின்' என்ற தொடர் இதனை எடுத்துக் காட்டுகின்றது. வானுலகுக்கும் பூவுலகுக்குமான மலக்குகளின் தொடர்பு அவ்விரவின் விடியற்காலை வரை தொடர்ந்திருக்கும்.

அவ்விரவு ஆயிரம் மாதங்களைவிடச் சிறப்பானது என்பதன் கருத்து, இவ்விரவில் செய்யப்படும் நற்செயல்கள் 1000 மாதங்கள் செய்த நற்செயல்

களுக்கு ஈடாகின்றன. சில முபஸ்ஸிரீன்கள் ஆயிரம் என்பது எண்ணிக்கை சார்ந்ததல்ல ஏராளமான என்ற கருத்தை வெளிப்படுத்தவே அவ்வாறு கையாளப்பட்டுள்ளது என்பர்.

எனவே இந்த ஸூராவை சரியாக ஓதுவதோடு அதனை மனனமிட்டு அது வலியுறுத்தும் கருத்துக்கையும் நம்பி செயல்படுவோமாக.

## பயிற்சி

1. சுருக்கமான விடை தருக.

   அ. அல்குர்ஆன் அருளப்பட்ட இரவு எவ்வாறு அழைக்கப்படுகிறது?

   ஆ. அவ்விரவு எவ்வளவு காலத்துக்குச் சமமானது?

   இ. லைலதுல் கத்ர் எனப்படும் இரவு எந்த நாட்களில் எதிர்பார்க்கப்படுகிறது?

   ஈ. லைலதுல் கத்ரில் ஓதுவதற்குச் சிபாரிசு செய்யப்பட்ட துஆவைத் தருக.

   உ. அவ்விரவில் நாம் செய்யக்கூடிய நற்செயல்கள் சிலவற்றைக் குறிப்பிடுக.

2. பின்வரும் அரபுத் தொடர்களின் பொருளைத் தருக.

لَيْلَةُ الْقَدْرِ

اَلْفِ شَهْرٍ

حَتّٰى مَطْلَعِ الْفَجْرِ

## செயற்பாடு

ஸூரதுல் கத்ரை மனனமிட்டு உரிய முறைப்படி ஓதிக்காட்டுக.

16

# ஸூரா அல் அலக்

## (முதல் ஐந்து வசனங்கள்)

ஜாஹிலிய்ய சமூகம் அனாச்சாரங்களில் மூழ்கியிருந்தது. அவற்றை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெறுத்து வந்தார்கள். இந்நிலை மாற்றமடைய வேண்டும் என்ற சிந்தனையுடன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனிமையை நாடி ஹிராக் குகைக்குச் செல்வதை வழமையாக்கிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு நாள் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் திடீரென அங்கு தோன்றி, ''ஓதுவீராக!'' எனக் கூறினார்கள். அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனக்கு ஓதத் தெரியாது எனப் பதிலளித்தார்கள். பின்னர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கட்டியணைத்து ஓதுவீராக! எனக் கூறினார்கள். அப்போதும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தனக்கு ஓதத் தெரியாது எனப் பதிலளித்தார்கள். அவ்வாறு மூன்று தடவைகள் இடம்பெற்றன. அதனைத் தொடர்ந்து ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஸூரா அலக்கின் முதல் ஐந்து வசனங்களையும் ஓதிக் காட்டினார்கள். இதுவே வஹியின் ஆரம்பமாகும்.

اِقْرَاْ بِاسْمِ رَبِّكَ الَّذِیْ خَلَقَ ۝١ خَلَقَ الْاِنْسَانَ مِنْ عَلَقٍ ۝٢
اِقْرَاْ وَرَبُّكَ الْاَكْرَمُ ۝٣ الَّذِیْ عَلَّمَ بِالْقَلَمِ ۝٤ عَلَّمَ الْاِنْسَانَ
مَا لَمْ یَعْلَمْ ۝٥

1. (நபியே!) உமது ரப்பின் திருநாமத்தைக் கொண்டு ஓதுவீராக! அவன் (எத்தகையவனெனில்) அனைத்தையும் படைத்தவன் ஆவான்.

2. மனிதனை இரத்தக் கட்டியிலிருந்து அவன் படைத்தான்.

3. (மேலும்) ஓதுவீராக! உம்முடைய ரப்பு மிகச் சங்கையானவன்.

4. அவன் எத்தகையவனென்றால், எழுது கோல் மூலம் (எழுதக்) கற்றுக் கொடுத்தான்.

5. மனிதனுக்கு அவன் அறியாதவற்றை எல்லாம் கற்றுக் கொடுத்தான்.

| பத விளக்கம் | அறபுப் பதம் |
|---|---|
| ஓதுவீராக, வாசிப்பீராக, படிப்பீராக, ஆராய்வீராக | اِقْرَاْ |
| உனது இறைவனின் பெயரால் | بِاسْمِ رَبِّكَ |
| மனிதனைப் படைத்தான் | خَلَقَ الْاِنْسَانَ |
| இரத்தக் கட்டி | عَلَقٍ |
| உமது இறைவன் சங்கையானவன் | وَرَبُّكَ الْاَكْرَمُ |
| எழுதுகோல் மூலம் கற்றுக் கொடுத்தான் | عَلَّمَ بِالْقَلَمِ |
| மனிதனுக்கு கற்றுக் கொடுத்தான் | عَلَّمَ الْاِنْسَانَ |
| அறியாததை | مَا لَمْ يَعْلَمْ |

அல்குர்ஆனின் முதலாவது அருளப்பட்ட வசனம் இரட்சகனின் (ரப்பின்) பெயரைக் கொண்டு ஓதுமாறு - கற்குமாறு பணிக்கின்றது. அகிலத்தோருக்கு வழிகாட்ட அல்லாஹ் தேர்ந்தெடுத்த தூதர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வுடன் தொடர்பு படும் முதல் நிலையிலேயே அவனின் பெயரைக் கொண்டு ஓதும்படி கட்டளையிடப்பட்டுள்ளது.

அல்லாஹ் ''படைப்பாளன்'' எனும் பண்புப் பெயரை முதலில் பொதுவாகக் குறிப்பிட்டு பின்னர் மனிதனைப் படைத்தமை பற்றிக் குறிப்பிடுகின்றது.

மனிதன் ஆரம்பத்தில் தாயின் கர்ப்பப் பையில் அலக் என்ற நிலையில் ஒட்டிக் கொண்டிருந்தான். பின்னர் அல்லாஹ்வின் அருளால் அந்த அலக்

படிப்படியாக வளர்ந்து மனித உருவைப் பெறுகின்றது. இது அல்லாஹ்வின் சக்தியையும் அவனது அருளையுமே சுட்டிக்காட்டுகின்றது.

அடுத்த வசனம் எழுதுகோல் பற்றிப் பேசுகின்றது. அது மனித வாழ்க்கையில் கல்விக்கான ஆரம்பமாகவும் பரவலாகப் பயன்படுத்தப்படும் உபகரணமாகவும் காணப்படுகின்றது. எனவே, எழுதுகோலைக் கொண்டு கற்பித்த அல்லாஹ் சங்கைக்குரியவன் என்றும் அல்குர்ஆன் குறிப்பிடுகின்றது.

அல்லாஹ் யாவும் அறிந்தவன். மனிதன் எதனையும் அறியாதிருந்த நிலையில் அவனே மனிதனுக்குத் தேவையானவற்றைக் கற்றுக் கொடுக்கி றான். மனிதன், மனித வாழ்வு, அண்ட சராசரங்கள் பற்றிய அனைத்தையும் அறிந்தவன் அல்லாஹ் மாத்திரமேயாவான். அவன் மூலமாகவே அனைத்தையும் மனிதன் கற்றுக் கொள்கின்றான் என்ற உண்மையை இந்த வசனம் முன்வைக்கின்றது.

கல்வி, அறிவு, பண்பாடு என்பவற்றின் உண்மையான பெறுமானத்தை விளங்கியிருக்காத ஜாஹிலிய்ய சமூகத்தை அறிவின்பாலும் பண்பாட்டு விழுமியங்களின் பக்கமும் ஆர்வமூட்டி சர்வதேச அரங்கில் பலமிக்கதும் முக்கியத்துவம் மிக்கதுமான சமூகமாக மாற்றுவதற்குரிய அடிப்ப டைகளைச் சுருக்கமாகவும் அழுத்தமாகவும் மேற்படி வசனங்கள் முன்வைத்துள்ளமையை அவதானிக்க முடிகிறது.

ஒரு சமூகத்தின் முன்னேற்றத்திற்குக் கல்வி அறிவு முக்கியமானதாகும். ஆகவே அறியாமை எனும் இருளில் மூழ்கியிருந்த ஜாஹிலிய்ய சமூகம் முன்னேற்றம் அடைவதற்கு அடித்தளமாக அமையும் வண்ணம் அல்லாஹுத்தஆலா அறிவின் முக்கியத்துவத்தை முதல் வஹியில் வலியுறுத்தியுள்ளான். அத்துடன் மனிதனின் தோற்றத்தின் பின்னால் உள்ள உண்மை நிலையையும் சுருக்கமாக விளக்கியுள்ளான்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. அல் குர்ஆனின் முதல் ஐந்து வசனங்களும் இறக்கப்பட்ட சந்தர்ப்பத்தைச் சுருக்கமாகக் குறிப்பிடுக.
2. இவ் வசனங்கள் முன்வைக்கும் முக்கிய கருத்துக்கள் இரண்டினைக் குறிப்பிடுக.
3. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிராக் குகைக்குச் செல்வதை வழமையாக்கிக் கொண்டதற்கான காரணங்கள் இரண்டு தருக.
4. அல்லாஹ்வின் பண்புகள் இரண்டினைக் குறிப்பிடுக.
5. பின்வரும் தமிழ்ப்பதங்களுக்கான அரபுப் பதங்களை எழுதுக.
   1. இரட்சகன்
   2. மனிதன்
   3. எழுதுகோல்
   4. கற்பித்தான்

## செயற்பாடு

ஸூரா அலக்கின் முதல் ஐந்து வசனங்களையும் பொருளுடன் மனனமிடுக.

17

# ஸுன்னாவின் முக்கியத்துவம்

**நிகழ்ச்சித் தொகுப்பாளர்:** ***அன்பின் நேயர்களே அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாத்துஹு. ''நத்வதுத் துல்லாப்'' வாராந்த முஸ்லிம் இளைஞர் நிகழ்ச்சிக்கு அன்புடன் வரவேற்கின்றோம். இன்றும் வழமை போன்று இந்நிகழ்ச்சியில் இஸ்லாத்தின் அடிப்படை அம்சங்கள் குறித்து மாணவர் சமுதாயத்துக்குத் தெளிவை வழங்குவதற்கு நாம் தயாராக உள்ளோம். இன்றும் இந் நிகழ்ச்சியிலே கருத்துக்களைப் பரிமாறுவதற்காக அதிதியாக மௌலவி அப்துல்லாஹ் அவர்கள் இணைந்து கொள்கின்றார்கள்.***

***மௌலவி அவர்களே, அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாத்துஹு.***

***அதிதி:*** *வஅலைக்குமுஸ்ஸலாம் வரஹ்மதுல்லாஹி வபரகாத்துஹு.*

*நிகழ்ச்சித் தொகுப்பாளர்:* ***நேயர்களே, சென்ற வார நிகழ்ச்சியில் நாம் இஸ்லாத்தின் அடிப்படை மூலாதாரம் என்ற வகையில் அல்குர்ஆனின் முக்கியத்துவம் பற்றிக் கலந்துரையாடினோம். இன்று இந் நிகழ்ச்சியில் நாம் ஸுன்னாவின் முக்கியத்துவம் பற்றிக் கலந்துரையாடவுள்ளோம். மௌலவி அவர்களே, ஸுன்னா என்றால் என்ன என்பதை விளக்க முடியுமா?***

*அதிதி :* *ஸுன்னா என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது வாழ்க்கையைக் குறிக்கிறது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது சொல், செயல், அங்கீகாரம், பண்புகள், வர்ணனைகள் ஆகிய அனைத்தையும் ஸுன்னா குறிப்பதாக இஸ்லாமிய அறிஞர்கள் குறிப்பிடுகின்றார்கள். ஹதீஸ் என்ற சொல்லும் அனேகமாக இதே கருத்திலேயே பயன்படுத்தப்*

படுகின்றது. எமது சமூகத்திலும் ஸுன்னா என்பதை விட ஹதீஸ் என்ற சொல்லே பிரபல்யம் அடைந்துள்ளது.

**நிகழ்ச்சித் தொகுப்பாளர்:** **மௌலவி அவர்களே. அல்குர்ஆன், ஸுன்னா இவை இரண்டுக்கும் இடையிலான தொடர்பினைச் சற்று விளக்க முடியுமா?**

அதிதி : நல்லதொரு கேள்வி. உண்மையில் இவையிரண்டுக்கும் இடையில் நெருக்கமான தொடர்புகள் காணப்படுகின்றன. அல்குர்ஆனும் ஸுன்னாவும் வஹியின் அடியாகத் தோன்றியவையாகும். அல்குர்ஆன் **வஹி மத்லூவ்** ஆகவும் ஸுன்னா **வஹி கைரு மத்லூவ்** ஆகவும் அமைந்துள்ளன.

அல்குர்ஆன் கூறும் விடயங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளவும் அதனை உரிய முறையில் நடைமுறைப்படுத்தவும் ஸுன்னா இன்றியமையாததாகும்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்வு தொடர்பாக வினவப்பட்டபோது அவர்களது வாழ்வு அல்குர்ஆனாகவே அமைந்திருந்ததாக ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் குறிப்பிட்டார்கள்.

**நிகழ்ச்சித் தொகுப்பாளர்:** **அல்குர்ஆனைப் பின்பற்றுவது எமது தலையாய கடமை என சென்ற நிகழ்ச்சியில் விளக்கினீர்கள். அதேபோன்று ஸுன்னாவைப் பின்பற்றுவது தொடர்பாகவும் எமக்கு விளக்குங்கள்.**

அதிதி : நிச்சயமாக. ஸுன்னா என்பது இஸ்லாத்தின் இரண்டாவது சட்ட மூலாதாரமாகும். சட்ட மூலாதாரம் என்பது நாம் எமது வாழ்க்கைக்குத் தேவையான சன்மார்க்கச் சட்டங்களைப் பெறுகின்ற மூல ஊற்று எனலாம். அதேபோன்று ஸுன்னாவைப் பின்பற்றுவது ஒவ்வொரு முஸ்லிமினதும் அடிப்படைக் கடமையாகும். அல்லாஹ்வுக்குக் கட்டுப்படுவது போலவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கும் நாம் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். அல்குர்ஆன் இது பற்றிப் பல்வேறு இடங்களில் வலியுறுத்தியுள்ளது.

‘‘நீங்கள் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் கட்டுப் பட்டு நடந்துகொள்ளுங்கள்’’ (3:32)

‘‘மேலும் தூதர் உங்களுக்குக் கொடுத்ததை நீங்கள் மனமுவந்து எடுத்துக்கொள்ளுங்கள். அவர் எதனை உங்களுக்குத் தடுத்தாரோ அதிலிருந்து நீங்கள் விலகிக் கொள்ளுங்கள்’’. (59:07)

நிகழ்ச்சித் தொகுப்பாளர்: ***ஸுன்னாவைப் பின்பற்றுவதன் முக்கியத்துவம் பற்றிய நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் போதனைகளை விளக்க முடியுமா?***

அதிதி : *ஆம். பல சந்தர்ப்பங்களில் இது பற்றி வலியுறுத்தியுள்ளார் கள். உதாரணத்துக்கு இந்த ஹதீஸைப் பாருங்கள்.*

*‘‘நான் உங்கள் மத்தியில் இரண்டு விடயங்களை விட்டுச் செல்கின்றேன். அவற்றை இறுகப் பற்றிச் செயற்படுவீர் களாயின் என்றுமே வழிதவறமாட்டீர்கள். ஒன்று இறை வேதம் (அல்குர்ஆன்) மற்றையது எனது வழிமுறை (ஸுன்னா) ஆகும்.’’ (முவத்தா) இதில் இன்னொரு முக்கிய விடயம் என்னவென்றால் இந்த ஹதீஸ் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இறுதி ஹஜ் பேருரையில் இடம்பெற்றிருக்கின்றது என்பதுதான்.*

நிகழ்ச்சித் தொகுப்பாளர்: ***நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு மனிதராக இருந்தாலும் அவர் இறைதூதர் என்ற வகையில் அவர்களின் வார்த்தைகள் எந்தளவு முக்கியத்துவமும் சிறப்பும் மிக்கவை என்பதை சற்று விளக்க முடியுமா?***

அதிதி : *ஆம், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது வார்த்தைகள் வஹியின் அடிப்படையில் அமைந்தவை எனப் பார்த்தோம். அல்லாஹ்வின் விருப்பத்துக்கு மாற்றமாக அவர்கள் எதனையும் பேசமாட்டார்கள். இதனையே இத்திருமறை வசனம் கூறுகின்றது.*

*‘‘அவர் தனது இஷ்டப்படி எதனையும் கூறுவதில்லை. (அவை அனைத்தும்) அவருக்கு வஹியாக அருளப் பட்டவை தாம்.’’ (53: 03) அதேபோல், நபி ஸல்லல்லாஹு*

அலைஹி வஸல்லம் அவர்களின் வார்த்தைகள் சொற் சுருக்கமும் கருத்துச் செறிவும் மிக்கவை. அதாவது குறைந்த சொற்களில் நிறைய அர்த்தமுள்ள விடயங்களைப் பேசுவார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முழு வாழ்க்கையும் ஆதாரபூர்வமாக பதியப் பட்டு பாதுகாக்கப்பட்டுள்ளமை இன்னொரு சிறப்பம்ச மாகும்.

உலகில் வேறெவரது வார்த்தைகளும் வரலாறும் இவ்வாறு நுணுக்கமாக அவதானிக்கப்பட்டு முழுமையாகவும் திருத்தமாகவும் பதியப்பட்டு பாதுகாக்கப்பட்டதில்லை. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அல்லாஹ்வின் உதவியோடு எதிர்காலத்தில் நடக்க விருப்பவை பற்றி முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள். அவை அவர்கள் சொன்னவாறு நடைபெற்றும் வந்துள்ளன.

**நிகழ்ச்சித் தொகுப்பாளர்:** **மௌலவி அவர்களே. அல்குர்ஆனுக்கு விளக்கமாக ஸுன்னா அமைந்துள்ளதாகக் குறிப்பிட்டீர்கள். அதனைச் சற்று விளக்குங்கள்.**

அதிதி : உதாரணமாக அல்குர்ஆன் தொழும்படி கட்டளையிட்டுள் ளது. அதனை எவ்வாறு நிறைவேற்றுவது என்பது பற்றி ஸுன்னாவே தெளிவுபடுத்தியுள்ளது. அவ்வாறே திருடனது கையைத் துண்டிக்கும் படி அல்குர்ஆன் கட்டளை யிடுகிறது. ஆனால் அதனை எவ்வெந்த சந்தர்ப்பங்களில் நிறைவேற்றுவது என ஸுன்னாவே விளக்கியுள்ளது.

**நிகழ்ச்சித் தொகுப்பாளர்:** **மௌலவி அவர்களே. இறுதியாக ஸுன்னா தொடர்பாக எமக்குள்ள கடமைகள் பற்றிச் சுருக்கமாகத் தெளிவு படுத்துங்கள்.**

அதிதி : ஆம், ஸுன்னாவைக் கற்பது, மனனமிடுவது, அதனை நடைமுறைப்படுத்துவது, பிறருக்கும் எடுத்துச்சொல்வது எனப் பல்வேறு கடமைகள் எம்மீது உள்ளன. அல் குர்ஆனைப் போலவே ஸுன்னாவையும் நாம் முழுமையாகப் பின்பற்றுவதற்கு முயற்சிக்க வேண்டும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின்

ஸுன்னாவில் இடம் பெறாதவற்றை அவர்கள் கூறியதாக பிறருக்கு எடுத்துரைப்பதிலிருந்து தவிர்ந்து கொள்வதும் நாம் ஸுன்னாவிற்குச் செய்ய வேண்டிய கடமையாகும்.

**நிகழ்ச்சித் தொகுப்பாளர்:** **நேயர்களே, இன்றைய நிகழ்ச்சியில் ஸுன்னா பற்றியும் அதனைப் பின்பற்றுவதன் அவசியம் பற்றியும் ஒரு சிறப்பான விளக்கத்தைப் பெற்றுக்கொண்டோம். நாம் கற்றுக்கொண்ட விடயங்களை எம் வாழ்விலும் கடைப்பிடிப்போம். இங்கே எமது அதிதியாக வருகை தந்து அழகானதொரு விளக்கத்தை வழங்கிய மௌலவி அப்துல்லாஹ் அவர்களுக்கு எமது நன்றிகள். ஜஸா கல்லாஹு கைறா.**

அதிதி : பாரகல்லாஹு பீக. (உங்களுக்கு அல்லாஹ் அருள்புரிவானாக)

## பயிற்சி

1. ஸுன்னா என்றால் என்ன?
2. ஸுன்னா என்ற கருத்தில் பயன்படும் இன்னொரு சொல் எது?
3. அல்குர்ஆனுக்கும் ஸுன்னாவுக்கும் இடையிலான தொடர்புகளைக் குறிப்பிடுக.
4. ஸுன்னாவைப் பின்பற்றுவதை வலியுறுத்தும் அல்குர்ஆன், ஹதீஸ் ஆதாரங்கள் ஒவ்வொன்று தருக.
5. ஸுன்னாவின் மீதான எமது கடமைகள் யாவை?

# 18

# வெட்க உணர்வு

இஸ்லாம் நற்பண்புகளின் மார்க்கம். அது ஒவ்வொரு முஸ்லிமும் நற்பண்புகளின் உறைவிடமாக இருக்க வேண்டும் என விரும்புகின்றது. ஒரு முஸ்லிம் தன்னிடம் வளர்த்துக் கொள்ள வேண்டிய அழகிய ஒழுக்கப் பண்புகளைப் பற்றி அல்குர்ஆனைப் போன்றே ஸுன்னாவும் பல இடங்களில் வலியுறுத்தியுள்ளது.

இவ்வாறு ஒரு முஸ்லிம் பெற்றிருக்க வேண்டிய ஒழுக்கப் பண்புகளில் வெட்க உணர்வு மிக முக்கியமான ஒன்றாகும். வெட்கம் என்பது அவலட்சணமான செயல்களைச் செய்வதிலிருந்து தவிர்ந்து கொள்ளும் பண்பாகும். அசிங்கங்களை அல்லாஹ்வும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் தெளிவுபடுத்தியுள்ளனர். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் வெட்க உணர்வுமிக்கவராக இருந்துள்ளார்கள். வெட்க உணர்வு பற்றி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்ட சில ஹதீஸ்களை நோக்குவோம்.

### வெட்கம் ஈமானின் கிளைகளில் ஒன்று

قَالَ النَّبِيُّ صَلَّى اللّٰهُ عَلَيهِ وَسَلَّم:

اَلْإِيْمَانُ بِضْعٌ وَسِتُّوْنَ، أَوْ : بِضْعٌ وَسَبْعُوْنَ ، شُعْبَةً ، أَعْلَاهَا شَهَادَةُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللّٰهُ ، وَأَدْنَاهَا إِمَاطَةُ الأَذَى عَنِ الطَّرِيقِ ، وَالْحَيَاءُ شُعْبَةٌ مِنَ الْإِيمَانِ (رواه البخاري ومسلم)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

ஈமான் அறுபதுக்கும் மேற்பட்ட அல்லது எழுபதுக்கும் மேற்பட்ட கிளைகளைக் கொண்டது. அதில் உயர்ந்தது ‘லாஇலாஹ இல்லல்லாஹ்’ என்பதாகும். அதில் மிகவும் தாழ்ந்தது பாதையில் இடையூறு தருபவற்றை அகற்றுவதாகும். வெட்கம் ஈமானின் கிளைகளில் ஒன்றாகும். (ஆதாரம்: புகாரி, முஸ்லிம்)

## வெட்கமும் ஈமானும் ஒன்றோடொன்று இணைந்தவை

قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيهِ وَسَلَّم:

اَلْحَيَاءُ وَالْإِيْمَانُ قُرِنَا جَمِيْعًا، فَإِذَا رُفِعَ أَحَدُهُمَا رُفِعَ الْآخَرُ (رواه الحاكم)

*நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: வெட்கமும் ஈமானும் ஒன்றோடு ஒன்று இணைந்தே இருக்கும். ஒன்று நீங்கிவிட்டால் மற்றையதும் நீங்கிவிடும். (ஆதாரம்: ஹாகிம்)*

## வெட்கம் எப்போதும் நல்லதையே தரும்

قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيهِ وَسَلَّم:

الحَيَاءُ لَا يَأْتِيْ إِلَّا بِخَيْرٍ (رواه البخاري ومسلم)

*நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: வெட்க உணர்வு எப்போதும் நன்மையையே கொண்டுவரும். (ஆதாரம்: புகாரி, முஸ்லிம்)*

## வெட்கம் அழகு சேர்க்கும்

قَالَ النَّبِيُّ صَلَّى اللَّهُ عَلَيهِ وَسَلَّم:

مَا كَانَ الْحَيَاءُ فِيْ شَيْءٍ إِلَّا زَانَهُ، وَلَا كَانَ الفُحْشُ فِيْ شَيْءٍ إِلَّا شَانَهُ (رواه الترمذى)

*நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: எந்தவொரு விடயத்தில் வெட்கம் பேணப்படுகின்றதோ அது அச்செயலை அழகாக்கிவிடும். மேலும் எந்தவொரு விடயத்தில் வெட்கம் நீங்கி விடுகிறதோ அது அச்செயலைக் களங்கப்படுத்திவிடும். (ஆதாரம்: திர்மிதி)*

## வெட்கமின்மை நரகத்துக்கு இட்டுச்செல்லும்

قَالَ النَّبِيُّ صَلَّى اللّٰهُ عَلَيهِ وَسَلَّم:

الْحَيَاءُ مِنَ الْإِيمَانِ وَالْإِيْمَانُ فِي الْجَنَّةِ , وَالْبَذَاءُ مِنَ الْجَفَاءِ وَالْجَفَاءُ فِي النَّارِ (رواه الترمذى)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: வெட்கம் ஈமானில் உள்ளது. ஈமான் சுவனத்திற்கு இட்டுச்செல்லும். வெட்கமின்றி தீய வார்த்தைகளைப் பேசுபவர்களை மக்கள் வெறுப்பர். மக்களினால் வெறுக்கப்பட்டவர்கள் நரகத்திற்குச் செல்வர். *(ஆதாரம்: திர்மிதி)*

இந்த ஹதீஸ்கள் வெட்க உணர்வு ஒரு முஸ்லிமின் வாழ்வில் எவ்வளவு முக்கியமானது என்பதை எமக்கு உணர்த்துகின்றன. வெட்க உணர்வு இல்லாதபோது ஒருவன் எத்தகைய பாவச் செயலையும் செய்ய முன்வருவான்.

எனவே, எமது வாழ்வின் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் வெட்க உணர்வைப் பேணுவோம். நமது பேச்சில், பார்வையில், கேள்வியில், நடை, உடை, பாவனை உள்ளிட்ட அனைத்திலும் வெட்க உணர்வோடு நடந்துகொள்வோம். அல்லாஹ்வும் ஏனைய மனிதர்களும் விரும்புகின்ற நல்ல மனிதர்களாக நாம் வாழ்ந்து ஈருலகிலும் வெற்றி பெறுவோம்.

### பயிற்சி

**சரி, பிழை கூறுக.**

1. வெட்கம் ஈமானின் ஒரு கிளையாகும். ( )
2. ஈமானுக்குப் பல படித்தரங்கள் கிடையாது. ( )
3. வெட்க உணர்வில்லாதவனின் ஈமான் பூரணமற்றது. ( )
4. வெட்க உணர்வின்மை ஒரு முஸ்லிம் நரகம் செல்லக் காரணமாகும். ( )
5. மோசமான வார்த்தைகளும் வெட்கமின்மையின் அடையாளமாகும். ( )

### செயற்பாடு

வெட்கம் பற்றி வந்துள்ள மேலுள்ள ஹதீஸ்களை எழுதி அவற்றை மொழிபெயர்ப்புடன் மனனமிடுக.

19

# ஸீரதுன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் - I

## நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மதீனா வாழ்வு

மக்காவில் முஸ்லிம்கள் மீதான எதிரிகளின் தொந்தரவுகளும் கொடுமைகளும் அதிகரிக்கத்தொடங்கின. இந்நிலையில் இஸ்லாத்தைச் சுதந்திரமாகப் பின்பற்றுவதற்கான பாதுகாப்பான ஓரிடத்தை நோக்கிச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் முஸ்லிம்களுக்கு ஏற்பட்டது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இதற்கு மிகப் பொருத்தமான இடமாக மதீனாவைத் தெரிவு செய்தார்கள். மதீனா அப்போது 'யஸ்ரிப்' என வழங்கப்பட்டது. எனவே, மக்காவில் இருந்த முஸ்லிம்களைத் தனித்தனியாகவும், குழுக்களாகவும் மதீனா நோக்கி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அனுப்பி வைத்தார்கள்.

இறுதியாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களும் குறைஷிக் காபிர்களின் கடும் எதிர்ப்புக்கு மத்தியில் மக்காவின் தெற்கே அமைந்துள்ள ஸவ்ர் குகையை அடைந்து, அங்கே மூன்று நாட்கள் தங்கி, பின்னர் குபாவுக்கும் அங்கிருந்து மதீனாவுக்கும் பாதுகாப்பாக வந்து சேர்ந்தார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மதீனா வாழ்க்கை ஹிஜ்ரத் நிகழ்வோடு ஆரம்பமாகின்றது. இது ''மக்காவில் இருந்த முஸ்லிம்கள் தமது உறவுகளையும், உடைமைகளையும் துறந்து அல்லாஹ்வின் கட்டளையின் பிரகாரம் மதீனா சென்று குடியேறியதைக் குறிக்கிறது.'' இந்த ஹிஜ்ரத்தைத் தொடர்ந்து மதீனாவில் ஓர் இஸ்லாமிய அரசு உருவானது. ஹிஜ்ரத் இஸ்லாமிய வரலாற்றில் மிக முக்கிய நிகழ்வாகக் கருதப்படுகின்றது. இந்த ஹிஜ்ரத்தை அடிப்படையாகக் கொண்டே இஸ்லாமிய வருடமும் கணிக்கப்படுகின்றது.

### மஸ்ஜிதுன் நபவி நிர்மாணம்

மதீனா சென்ற நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மேற்கொண்ட பிரதான பணி மஸ்ஜிதுன் நபவியை நிர்மாணித்தமை

ஆகும். தனது ஒட்டகம் போய் அமர்ந்து கொண்ட இடத்தைப் பள்ளிவாசல் நிர்மாணிப்பதற்கான இடமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தெரிவுசெய்தார்கள். அவ்விடத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விலைகொடுத்து வாங்கி மிக எளிமையான முறையில் தன் தோழர்களோடு சேர்ந்து அப்பள்ளிவாசலைக் கட்டிமுடித்தார்கள்.

மதீனா சென்ற பின்னர் ஐங்கால ஜமாஅத் - கூட்டுத் தொழுகை முஸ்லிம்கள் மீது விதியாக்கப்பட்டது. பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அதான் கூறி மக்களை ஐங்காலத் தொழுகைக்காக அழைத்தார்கள்.

மஸ்ஜிதுன் நபவி இஸ்லாமிய சமூகத்தின் மத்திய நிலையமாக இருந்தது. ஜமாஅத் தொழுகைகள் அங்கு நிறைவேற்றப்பட்டன. இதனால் எல்லோரும் ஓரிடத்தில் அடிக்கடி சந்தித்து சுகதுக்கங்களை விசாரித்துக் கொள்ள வழிபிறந்தது. சமூகத்தில் ஏற்படும் பிணக்குகளைத் தீர்த்துவைக்கும் நிலையமாகவும் மஸ்ஜிதுன் நபவி செயற்பட்டது. வெளிநாட்டுத் தூதுவர்கள் அங்குதான் வரவேற்று உபசரிக்கப்பட்டனர். வறியோர்கள், அவசரத் தேவையுடையோர்களுக்கு நிவாரணம் வழங்கும் இடமாகவும் அது இருந்தது. அதுமட்டுமன்றி, சமூகத்துக்கு அறிவைப் பரப்பும் கலங்கரை விளக்காகவும் மஸ்ஜிதுன் நபவி விளங்கிற்று. இவ்வாறு பல பணிகளை நிறைவேற்றும் கலாசார நிலையமாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நிறுவிய பள்ளிவாசல் திகழ்ந்தது.

### முஹாஜிர்களுக்கும் அன்ஸார்களுக்கும் இடையில் சகோதரத்துவத்தை ஏற்படுத்தல்

மக்காவில் இருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்றவர்கள் 'முஹாஜிர்கள்' என்றும் அவர்களை வரவேற்று அடைக்கலம் கொடுத்து உதவிபுரிந்த மதீனா வாசிகள் 'அன்ஸார்கள்' என்றும் அழைக்கப்பட்டனர். முஹாஜிர்களுக்கு உதவி ஒத்தாசை புரிவதில் மதீனா முஸ்லிம்கள் தமக்கிடையே போட்டி போட்டுக்கொண்டார்கள். இவர்களைப் பற்றி அல் குர்ஆனும் பாராட்டிப் பேசியுள்ளது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனா சென்ற பின்னர் முஹாஜிர்களுக்கும் அன்ஸார்களுக்கும் இடையில் உறுதியான சகோதரத்துவப் பிணைப்பை ஏற்படுத்தினார்கள். இந்த சகோதரத்துவப் பிணைப்பே இஸ்லாம் வளர்வதற்கு அவசியமானது என்பதை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உறுதியாக நம்பினார்கள். இதனால் ஏற்கனவே இவர்களுக்கிடையில் இருந்த அன்பும்

புரிந்துணர்வும் பன்மடங்கு அதிகரித்தன. ஒவ்வொரு முஹாஜிரும் இன்னொரு அன்ஸாரியோடு சகோதரர்களாக இணைத்துவிடப்பட்டனர். இதன்மூலம் மதீனா அன்ஸாரிகள் தம்மிடமிருந்த வீடு, காணி, தொழில் உள்ளிட்ட அனைத்தையும் தம் புதிய சகோதரருக்காகப் பாதி பிரித்துக் கொடுத்தனர். இத்தகைய சகோதரத்துவப் பிணைப்பைப் போன்ற ஒன்றை உலக வரலாறு இதுவரை கண்டதில்லை.

அன்ஸார்கள் அனைத்தையும் பங்குகொடுக்க முன்வந்தபோதும் முஹாஜிர்கள் அவை அனைத்தையும் உடனே பெற்றுக்கொள்வதற்குத் தயங்கினார்கள். தம் சகோதரருக்கு அது சங்கடத்தை ஏற்படுத்தும் என்ற எண்ணமே இவ்வாறு அவர்களைச் செய்யத் தூண்டியது.

ஸஃத் பின் ரபீஉ ரழியல்லாஹு அன்ஹு என்ற அன்ஸாரி தன் முழுச் சொத்தில் பாதியை முஹாஜிர் சகோதரர் அப்துர் ரஹ்மான் பின் அவ்ப் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு முழுமனதோடு கொடுக்க முன்வந்தார்கள். அப்போது அப்துர் ரஹ்மான் பின் அவ்ப் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ''தோழரே உங்கள் குடும்பத்துக்கும் செல்வத்துக்கும் அல்லாஹ் என்றும் அருள்புரிவானாக.. எனக்கு நீங்கள் தொழிலில் பாதி தரவேண்டாம். சந்தையைக் காட்டித்தாருங்கள். நான் வியாபாரம் செய்து சம்பாதித்துக்கொள்கின்றேன்'' எனப் பெருமனதோடு கூறினார்கள். இவர்கள் பிற்காலத்தில் மதீனாவில் பெரும் செல்வந்தர்களில் ஒருவராக மாறினார்கள்.

**பயிற்சி**

1. இஸ்லாமிய வருடக் கணிப்பு எந்த நிகழ்வை வைத்து மேற் கொள்ளப்படுகின்றது ?
2. முஹாஜிர், அன்ஸார் எனப்படுவோர் யாவர்?
3. முஸ்லிம்கள் மக்காவில் இருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்ற தற்கான இரு காரணங்களைக் குறிப்பிடுக.
4. பள்ளிவாசல் மூலம் சமூகத்தில் எத்தகையை பணிகளைச் செய்ய முடியும் என்பதைக் குறிப்பிடுக.
5. மக்காவாசிகளுடன் மதீனாவாசிகள் நடந்துகொண்ட முறையை முன்வைக்குக.
6. ஹிஜ்ரத்துக்கு முன்னர் மதீனாவுக்கு வழங்கப்பட்ட பெயர் என்ன ?

# 20

# ஸீரதுன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் - II



## மதீனாவில் ஒரு முன்மாதிரி சமூகம்

ஒரு சிறந்த சகோதரத்துவப் பிணைப்பின் ஊடாகத் தனித்துவமான தொரு சமூகத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உருவாக்கினார்கள். ஏற்கனவே மதீனாவில் பல வருடங்கள் தமக்கிடையே போரிட்டுக்கொண்டிருந்த அவ்ஸ், கஸ்றஜ் கோத்திரத்தினர் இடையே சமாதானம் செய்துவைக்கப்பட்டது. அங்கு ஜமாஅத் தொழுகை, ஜும்ஆத் தொழுகை, நோன்பு, ஸக்காத் உள்ளிட்ட பல்வேறு கடமைகள் விதியாக்கப்பட்டன. சமூக வாழ்க்கைக்கு அவசியமான சட்டங்கள் நடைமுறைக்கு வந்தன. குற்றங்களுக்கான தண்டனைகளும் விதியாக்கப்பட்டன. இந்த அரசில் நீதி, நேர்மை, சமத்துவம், புரிந்துணர்வு, பரஸ்பர உதவி, ஒழுக்கம் போன்ற இன்னோரன்ன உயரிய பெறுமானங்கள் தழைத்தோங்கின.

## யூதர்களுடன் உடன்படிக்கை

மதீனாவில் முஸ்லிம்கள் மாத்திரமன்றி இன்னும் சில பிரிவினரும் வாழ்ந்தனர். அவர்களுள் அதிக எண்ணிக்கையினராக இருந்த யூதர்களுடன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உடன்படிக்கை செய்து கொண்டார்கள். இவ்வுடன்படிக்கை 'ஸஹீபதுல் மதீனா' என அழைக்கப்பட்டது. இதன் மூலம் பிற சமயத்தவர்கள் தமக்குரிய வழிபாட்டு உரிமையை பெற்றுக் கொண்டனர். மதீனா அரசை எல்லோரும் சேர்ந்து பாதுகாக்க வேண்டும் என இதில் வலியுறுத்தப்பட்டது. இவ்வொப்பந்தம் மூலம் மதீனாவில் அமைதியான ஒரு சூழல் உருவாக்கப்பட்டதுடன், மக்கத்துக் காபிர்கள் திடீரென்று வந்து தாக்க முடியாத நிலையும் ஏற்பட்டது.

## கஸவாத்

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப் பல யுத்தங்களை எதிர்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அதில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நேரடியாகக் கலந்துகொண்டார்கள். அவ்வாறு அவர்கள் கலந்துகொண்ட யுத்தங்களே '**கஸவாத்**' எனப்படுகின்றன. இப்போர்களில் எல்லாம் அல்லாஹ் முஸ்லிம்களுக்கு உதவி செய்து தனது உயரிய மார்க்கமான இஸ்லாத்தைப் பாதுகாத்தான்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பத்ர், உஹத், அஹ்ஸாப், கைபர், ஹுனைன் போன்ற போர்களை எதிர்கொண்டார்கள். இதன் போது இஸ்லாம் வலியுறுத்தியுள்ள யுத்த தர்மங்களைக் கண்டிப்பாகப் பின்பற்றுமாறு தன் தோழர்களை ஏவியுள்ளார்கள். இப்போர் தருமங்கள் இன்றுவரை எல்லோருக்கும் சிறந்த படிப்பினையாக உள்ளன.

- அத்துமீறி அநியாயம் இழைத்தோருடன் மாத்திரமே யுத்தம் புரிய அனுமதி உண்டு. பொதுமக்களை ஒருபோதும் தாக்கக் கூடாது.
- போரின்போது பெண்களையோ, குழந்தைகளையோ, முதியவர்களையோ தாக்க அனுமதி கிடையாது.
- பசுந் தாவரங்கள், கனி தரும் மரங்கள், பயிர் நிலங்களை நாசம் செய்யக் கூடாது.
- எதிரியைச் சித்திரவதை செய்யவோ, உருக்குலைக்கவோ, எரிக்கவோ கூடாது.

- வழிபாட்டுத் தளங்களையோ, மத போதகர்களையோ இலக்கு வைக்கக் கூடாது.

இவ்வாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் போதித்த யுத்த தர்மங்கள் எல்லாக் காலத்திற்கும் பொருத்தமானதாக அமைந்துள்ளன.

குறுகிய காலத்தில் ஒரு சிறந்த சமூகத்தை அல்லாஹ்வின் உதவியோடு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கட்டியெழுப்பியமை ஒரு வரலாற்றுச் சாதனை ஆகும். இதனால் தான் மைக்கல் எச். ஹார்ட் என்பவர் தனது `The Hundred' என்ற நூலில், உலகில் செல்வாக்குச் செலுத்தியவர்களில் நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே முதலிடம் வகிப்பதாகக் குறிப்பிட்டுள்ளார்.

நாம், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் வாழ்வின் ஒவ்வொரு கட்டங்களிலும் உள்ள முன்மாதிரிகளைக் கற்று, அவற்றை எம் வாழ்வில் நடைமுறைப்படுத்த வேண்டும். அப்போதுதான் ஈருலகிலும் எம்மால் நிச்சயம் வெற்றிபெற முடியும்.

### பயிற்சி

பின்வருவனவற்றிக்கு விடை தருக.

1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவில் யூதர்களுடன் மேற்கொண்ட உடன்படிக்கை எவ்வாறு அழைக்கப்படுகின்றது ?
2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கலந்து கொண்ட போர்கள் எவ்வாறு அழைக்கப்படுகின்றன? அவ்வாறான போர்கள் மூன்றைக் குறிப்பிடுக.
3. இஸ்லாம் கூறும் யுத்த தருமங்கள் நான்கைக் குறிப்பிடுக.
4. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மதீனா வாழ்விலிருந்து நீர் பெற்றுக்கொண்ட படிப்பினைகள் ஐந்தை எழுதுக.
5. மதீனா சமூகத்தின் சிறப்புப் பண்புகள் ஐந்தினை எழுதுக.

21

# உம்மஹாதுல் முஃமினீன்

நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இஸ்லாத்தின் வளர்ச்சிக்காகவும், ஏக தெய்வக் கொள்கையைப் பாதுகாக்கவும் ஆதரவற்றவர்களை ஆதரிக்கவும் எனப் பல்வேறு காரணங்களுக்காக பல திருமணங்களைச் செய்தார்கள். இவ்வாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் திருமணம் செய்த அவரது மனைவியர்கள் உம்மஹாதுல் முஃமினீன்கள் (முஃமீன்களின் தாய்மார்கள்) என அழைக்கப் படுகின்றனர்.

இஸ்லாத்தை ஏற்ற ஒரே காரணத்திற்காக ஸஹாபாக்கள் கொடூரமான முறையில் துன்புறுத்தப்பட்டார்கள். இவ்வாறு துன்புறுத்தப்பட்டவர்கள் தனது உயிர், உடல், மானம், சொத்து, சொந்தபந்தங்களை இழந்து நிர்க்கதியானார்கள். இஸ்லாத்தைப் பாதுகாப்பதற்காக பத்ர், உஹத் போன்ற யுத்தங்களில் கலந்து கொண்ட ஸஹாபாக்கள் பலர் ஷஹீதானார்கள். இதனால் அவர்களின் மனைவியர்கள் விதவையானார்கள். இவ்வாறு விதவையானவர்களுக்கு நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் மறுவாழ்வளித்தார்கள். சிலரை நபிஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே முன்வந்து திருமணம் செய்து வாழ்வளித்தார்கள். இவ்வாறு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் வாழ்வளிக்கப்பட்ட அன்னையர்களான ஹப்ஸா ரழியல்லாஹு அன்ஹா, உம்மு ஸல்மா ரழியல்லாஹு அன்ஹா ஆகியோர்களைப் பற்றி இவ்வத்தியாயத்தில் அறிந்து கொள்வோம்.

## அன்னை ஹப்ஸா ரழியல்லாஹு அன்ஹா

அன்னை ஹப்ஸா ரழியல்லாஹு அன்ஹா அவர்களின் தகப்பனார் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆவார்கள். இவர்கள் நுபுவ்வத்துக்கு 05 வருடங்களுக்கு முன் பிறந்தார்கள். இவர்களது முதற் கணவர் ஹானிஸ் பின் ஹதபா ஸஹ்மி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆவார்கள். உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட போது இக்குடும்பத்தினர் அனைவரும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

அப்போது குறைஷியர்களால் இழைக்கப்பட்ட இன்னல்களைத் தவிர்த்துக் கொள்வதற்காக இருவரும் அபீஸீனியாவிற்கு ஹிஜ்ரத் சென்றார்கள். மதீனா ஹிஜ்ரத்திலும் இருவரும் கலந்து கொண்டார்கள்.

பத்ர் யுத்தத்திலும் கலந்து கொண்ட ஹப்ஸா ரழியல்லாஹுு அன்ஹா அவர்களின் கணவர் ஹானிஸ் ரழியல்லாஹுு அன்ஹுு அவர்கள் காயமுற்று சிறிது காலத்தின் பின் மதீனாவில் வபாத்தானார்கள். அப்போது அன்னை ஹப்ஸாவுக்கு வயது இருபது. உமர் ரழியல்லாஹுு அன்ஹுு அவர்கள் தனது மகள் ஹப்ஸாவை முதலில் அபூபக்கர் ரழியல்லாஹுு அன்ஹுு அவர்களிடமும் அடுத்து உஸ்மான் ரழியல்லாஹுு அன்ஹுு அவர்களிடமும் மணம்புரிந்து கொள்ளுமாறு வேண்டினார்கள். இருவரும் சம்மதிக்கவில்லை. பின்னர் நபி ஸல்லல்லாஹுு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வேண்டிக் கொண்டதற்கிணங்க ஹிஜ்ரி 2ஆம் ஆண்டில் விவாகம் நடந்தேறியது.

அன்னை ஆயிஷா ரழியல்லாஹுு அன்ஹாவுக்கு அடுத்தபடியாக ஹப்ஸா ரழியல்லாஹுு அன்ஹாவே சிறந்த கல்வியும் மார்க்க ஞானமும் உள்ளவராக இருந்தார்கள். எழுத, வாசிக்கத் தெரிந்த இவர்களிடம் வந்து பெண்கள் கல்வி கற்பார்கள். அறுபதுக்கு மேற்பட்ட ஹதீஸ்களை ஹப்ஸா ரழியல்லாஹுு அன்ஹா அவர்கள் அறிவித்துள்ளார்கள். அநேகமாக பகற் காலங்களை நோன்பு நோற்பதிலும் இராக் காலங்களை இறை வணக்கத்திலும் கழிப்பார்கள். மக்களிடையே குழப்பங்கள், பேதங்கள் ஏற்படுவதை அதிகம் வெறுத்தார்கள். அபூபக்ர் ரழியல்லாஹுு அன்ஹுு அவர்களின் காலத்தில் தொகுக்கப்பட்ட அல்குர்ஆன் பிரதி உமர் ரழியல்லாஹுு அன்ஹுு அவர்களுக்குப்பின் ஹப்ஸா ரழியல்லாஹுு அன்ஹா அவர்களின் பாதுகாப்பிலேயே இருந்தது. இவர்கள் தனது 63 வது வயதில் மதீனாவில் வபாத்தானார்கள்.

## உம்மு ஸல்மா ரழியல்லாஹுு அன்ஹா

அன்னை உம்மு ஸல்மா ரழியல்லாஹுு அன்ஹா அவர்களின் இயற் பெயர் ''ஹிந்த்'' என்பதாகும். இவர் குறைஷி வம்சத்தவர். இவரது தந்தை அபூஉமையா என்பவராவார். இவருடைய முதற் கணவர் அபூஸல்மா மக்ஸூமி ரழியல்லாஹுு அன்ஹுு என்றழைக்கப்பட்ட அப்துல்லா பின் அப்துல் அஸத் என்பவராவார். நபித்துவத்தின் ஆரம்பத்திலேயே தன் கணவருடன் இஸ்லாத்தை ஏற்றார். அபீஸீனியா, மதீனா ஹிஜ்ரத்களில் தன் கணவருடன் பங்குபற்றினார். மதீனாவிற்கு ஹிஜ்ரத் சென்ற

பெண்களில் இவரும் முக்கியமானவர். உஹது யுத்தத்தில் ஏற்பட்ட காயம் காரணமாக கணவர் அபூஸல்மா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் உயிர் துறந்தார்கள். இந்நிலையிலேயே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரி 04 ஆம் ஆண்டு அன்னை உம்மு ஸல்மா ரழியல்லாஹு அன்ஹா அவர்களைத் திருமணம் செய்தார்கள்.

உம்மு ஸல்மா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் மிகவும் பொறுமை யுள்ளவர்கள். கந்தக் யுத்தத்தின் போதும் கைபர் யுத்தத்தின் போதும் இவர்கள் பிரசன்னமாயிருந்தார்கள். ஹுதைபிய்யா உடன்படிக்கையின் போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கவலையைப் போக்குவதற்காகவும் பிரச்சினைகள் தீர்வதற்காகவும் குர்பான் கொடுப்பதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஆலோசனை வழங்கியவரும் இவரே. இவர் தாராள மனப்பாங்கும் புத்தியும் ஞானமும் நிறைந்தவர். தாபிஈன்களுக்கு ஆசானாக இருந்த இவர் 378 ஹதீஸ்களை அறிவித்துள்ளார்கள்.

உம்மஹாதுல் முஃமினீன்களில் இறுதியாக வபாத்தாகியவர் உம்மு ஸல்மா ரழியல்லாஹு அன்ஹா அவர்களே. இவர்கள் தனது 84 ஆம் வயதில் ஹிஜ்ரி 63 இல் வபாத்தானார்கள்.

### பயிற்சி

இடைவெளி நிரப்புக.

1. அன்னை ஹப்ஸா ரழியல்லாஹு அன்ஹா அவர்களின் தகப்பன் .................. ஆவார்.
2. அன்னை ஹப்ஸா ரழியல்லாஹு அன்ஹா அவர்களின் கணவர் ....................... யுத்தத்தில் காயமடைந்து ஷஹீதானார்கள்.
3. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அன்னை ஹப்ஸா ரழியல்லாஹு அன்ஹா அவர்களை ஹிஜ்ரி ................ ஆம் ஆண்டு மறுமணம் செய்தார்கள்.
4. அன்னை உம்மு ஸல்மா ரழியல்லாஹு அன்ஹா அவர்களின் முதற் கணவர் ........................ யுத்தத்தில் ஷஹீதானார்கள்.
5. உம்மு ஸல்மா ரழியல்லாஹு அன்ஹா அவர்களே ஹுதைபியா உடன்படிக்கையின்போது ..................... கொடுப்பதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஆலோசனை வழங்கியவர் ஆவார்.

22

# ஹஸன், ஹுஸைன்
## ரழியல்லாஹு அன்ஹுமா

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பேரர்களான இவர்கள் பிறந்தவுடன் இவ்விரண்டு ஆடுகள் அகீகா கொடுக்கப்பட்டு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களாலேயே ஹஸன், ஹுஸைன் எனப் பெயரும் சூட்டப்பட்டது. இவ்விருவர் மீதும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பேரன்பும், நேசமும் வைத்திருந்தார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொழுகையில் இருக்கும் போது சிறுவர்களாக இருந்த இவ்விருவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் முதுகில் ஏறிக் கொள்வார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் இவர்கள் மீது மிகவும் இரக்கம் காட்டினார்கள். இவர்களுக்கான அறிவையும் பண்பாட்டையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே போதித்தார்கள். இவ்விருவரையும் குறித்து ஒரு முறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ''இவ்விருவரும் இவ்வுலகிலுள்ள எனது இரு றைஹான் பூக்கள்'' என்றார்கள். மற்றொரு முறை ''சுவன வாலிபர்களின் தலைவர்கள்'' எனப் பாராட்டினார்கள். ''நான் இவ்விருவரையும் நேசிக்கின்றேன், நீங்களும் நேசிப்பீர்களாக'' எனவும் கூறியுள்ளார்கள்.



# ஹஸன் ரழியல்லாஹு அன்ஹு

அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும் பாத்திமா ரழியல்லாஹு அன்ஹா அவர்களுக்கும் பிறந்த மூத்த புதல்வரே இவராவார். ஹிஜ்ரி மூன்றாம் வருடம் ரமழான் மாதத்தில் இவர்கள் பிறந்தார்கள்.

இவர்கள் மிகப் பொறுமையாளராகவும், பெருங்கொடை வள்ளலாகவும், தாராளமானவர்களாகவும், இஸ்லாமிய ஒழுக்கங்களைப் பேணுபவராகவும் இருந்தார்கள். தனது தகப்பனார் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்குப் பின் கலீபாப் பதவியேற்றார்கள். சுமார் ஆறு மாதங்களே ஆட்சி புரிந்தார்கள். அப்பொழுது முஆவியா ரழியல்லாஹு அன்ஹு அவர்களுடன் சமாதான உடன்படிக்கை செய்து முஆவியா ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கே ஆட்சியை விட்டுக் கொடுத்தார்கள். இதன் மூலம் முஸ்லிம்களை ஒன்றுபட வைத்தார்கள். ஹிஜ்ரி 41 இல் நடைபெற்ற இச்சம்பவத்தின் மூலமாக ''எனது இந்த மகன் மூலமாக முஸ்லிம்களின் இரு பிரிவுகளுக்கிடையில் ஒற்றுமை ஏற்படும்'' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிய தீர்க்க தரிசனம் நிறைவேறியது.

ஒரு முறை ஒரு மனிதன் தனக்கு பத்தாயிரம் திர்ஹம் (வெள்ளிக்காசு) தர வேண்டும் என அல்லாஹ்விடம் பிரார்த்திப்பதை செவியுற்ற ஹஸன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் உடனே வீட்டுக்குச் சென்று பத்தாயிரம் திர்ஹம்களை கொண்டு வந்து அந்த மனிதனுக்கு அன்பளித்தார்கள். கேட்போருக்கு இல்லையென ஒரு போதும் இவர்கள் கூறியதில்லை. ஒரு தோட்டத்தை அவர்கள் எவரிடமாவது விலை கொடுத்து வாங்கிய பின்னர் விற்றவர் தனக்கு வசதி வந்த பொழுது திரும்பவும் அதைத் தனக்கு கொடுக்குமாறு வேண்டினால் உடனே அவருக்கு கொடுத்துவிடும் பெருந் தன்மையுடையவராக இருந்தார்கள்.

இவர்கள் ஒரு துரோகியால் நஞ்சூட்டப்பட்டு உயிர் துறந்தார்கள். நஞ்சூட்டப்பட்டபோது ஏற்பட்ட கடுமையான வேதனை பற்றி ஹஸன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பிரஸ்தாபிப்பதனைக் கேட்ட சகோதரன் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது சகோதரனைப் பார்த்து ''யாரை நீங்கள் சந்தேகிக்கின்றீர்கள்'' என வினவினார்கள். அப்பொழுது அவர்கள் ''ஏன் கேட்கின்றீர்கள்'' என வினவ ''அவனைக் கொலை செய்வதற்கென'' ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள்.

அப்பொழுது ஹஸன் ழியல்லாஹு அன்ஹு அவர்கள் ‘‘நான் நினைக்கின்றவனாக அந்த நஞ்சூட்டியவனிருந்தால் அல்லாஹுதஆலா அவனைக் கவனித்துக் கொள்வான். நான் நினைக்கின்றவனாக அவன் இல்லா விட்டால் ஒரு நிரபராதி எனது காரணத்தால் கொல்லப்படுவதை நான் விரும்பமாட்டேன்’’ எனக் கூறிவிட்டார்கள். இவர்கள் ஹிஜ்ரி நாற்பத் தொன்பதாம் ஆண்டில் தனது 46 ஆவது வயதில் மதீனாவில் வபாத்தானார்கள்.

## ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு

அலி ரழியல்லாஹு அன்ஹு - பாத்திமா ரழியல்லாஹு அன்ஹா ஆகியோரின் புதல்வரும் ஹஸன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் சகோதரருமான ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹிஜ்ரி நாலாம் வருடம் ஷஃபான் மாதம் மதீனாவில் பிறந்தார்கள்.

ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தன் தகப்பனார் கூபாவுக்குப் போகும் வரையும் அவருடன் மதீனாவிலேயே இருந்தார்கள். ஜமல், ஸிப்பீன், நகர்வான் ஆகிய போர்களில் கலந்து கொண்டார்கள்.

தகப்பனார் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கொல்லப்பட்ட பின்னர் சகோதரன் ஹஸன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுடன் இருந்தார்கள். ஹஸன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கிலாபத்தை விட்டுகொடுத்த பின்னர் அவர்களுடன் மதீனாவுக்கே திரும்பி விட்டார்கள். அதன் பின்னர் மக்காவுக்குச் சென்றார்கள்.

அப்பொழுது முஆவியா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மரணித்து, அவரது மகன் யஸீத் கலீபாவாகப் பதவியேற்றிருந்தார். ஈராக், கூபா வாசிகள் யஸீதின் ஆட்சியை விரும்பவில்லை. இவர்கள் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கலீபாவாக ஏற்று பைஅத் செய்வதாகக் கூறி ஈராக்குக்கு வந்து ஆட்சி நடத்துமாறு வேண்டினார்கள்.

இவ்வேண்டுகோளை ஏற்ற ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நிலைமையை அறிந்து வர தனது சிறிய தந்தையின் மகனான முஸ்லிம் இப்னு அகீல் என்பவரை ஈராக்கிற்கு அனுப்பினார்கள். அங்கு பல்லாயிரக்கணக்கானோர் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்காக முஸ்லிம் இப்னு அக்கீல் இடம் பைஅத் செய்தனர். நிலைமை சாதகமாக இருந்ததனால் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூபா நோக்கி வந்தார்கள்.

இதற்கிடையில் கலீபா யஸீத்தின் கவர்னர் அப்துல்லாஹ் இப்னு ஸியாத் முஸ்லிம் இப்னு அகீலைக் கொலை செய்து விட்டார். கூபா நோக்கி வந்து கொண்டிருந்த ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு இச்செய்தி கேள்விப்பட்டது. அவர்கள் திரும்பிச் செல்வதற்கு ஆயத்தமானார்கள். அப்போது முஸ்லிம் இப்னு அகீலின் சகோதரர்களின் வற்புறுத்தல் காரணமாக மீண்டும் கூபாவை நோக்கி நடந்தார்கள். அப்துல்லாஹ் இப்னு ஸியாத் இவர்களைத் தாக்குவதற்காக 45 குதிரை வீரர்கள் உட்பட சுமார் 150 வீரர்களை உமர் இப்னு ஸஃத் என்பவரின் தலைமையில் அனுப்பினார். இப்படை கர்பலா எனுமிடத்தில் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கோஷ்டியைச் சந்தித்தது.

கர்பலாவில் சந்தித்ததும் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பின்வருமாறு கூறினார்கள். ''உமர் இப்னு ஸஃதே நான் முஸ்லிம்களுடன் யுத்தம் புரிய வரவில்லை. கூபாவாசிகள் கட்டாயப்படுத்தி அழைத்ததற்காக அல்லாஹ்வுக்காக சேவை புரியவே வந்தேன். முஆவியாவிற்குப் பின் எனக்கே பைஅத் செய்வதென்றும் அறிவித்தார்கள். இப்பொழுது நான் இங்கு வந்த பின்னரே முஸ்லிம் இப்னு அகீல் கொல்லப்பட்டதையும் நிலைமை வேறு விதமாக இருப்பதையும் அறிகின்றேன். எனவே நான் மதீனாவிற்குத் திரும்பிச் சென்று விடுகின்றேன். அல்லது யஸீத்திற்கு பைஅத் செய்கின்றேன். அல்லது இந்த ஊரின் எல்லையில் ஒதுங்கிக் கொள்கின்றேன்'' என்றார்கள்.

அவர் கூறியதை உமர் ஒப்புக் கொண்டு இப்னு ஸியாத்திற்கு அறிவித்தார். இப்னு ஸியாத் இக்கோரிக்கைகள் எதற்கும் இணங்க வில்லை. எனவே ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் உட்பட பதினேழு வாலிபர்கள் கர்பலா யுத்த களத்தில் கொல்லப் பட்டார்கள். ஹிஜ்ரி 61 ஆம் வருடம் முஹர்ரம் மாதம் தனது 56 வது வயதில் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஷஹீதானார்கள்.

கலீபா யஸீத் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொன்றதற்காக இப்னு ஸியாத்தின் மீது மிக்க ஆத்திரங் கொண்டு மிகத் துக்கத்துடன் அவரை சபித்தார். பின்னர் எஞ்சியிருந்த ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் குடும்பத்தினரைத்

தனது மாளிகையில் தங்க வைத்து உணவூட்டி, உபசரித்து ஆறுதலும் கூறி மதீனாவுக்கு அனுப்பி வைத்தார்.

இமாம் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களும் தனது சகோதரன் ஹஸன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைப் போன்றே பல முறை கால் நடையாக மக்காவுக்குச் சென்று கஃபாவைத் தரிசித்துள்ளார்கள். அமைதி, எளிமை, துணிவு, சத்தியம் போன்ற குணங்களையுடைய இமாம் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் வாழ்க்கையில் நிறையப் படிப்பினைகள் இருக்கின்றன. அவற்றைக் கற்பதோடு மட்டுமல்லாமல் அவர்களின் நற்குண நல்லொழுக்கங்களையும் பின்பற்றி வாழ்வோம்.

## பயிற்சி

சுருக்கமான விடை தருக.

1. ஹஸன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் எப்போது பிறந்தார்கள்?
2. ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் எத்தனையாம் வயதில் ஷஹீதானார்கள்?
3. ஹஸன், ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹுமா ஆகிய ஒவ்வொருவரிடமும் காணப்பட்ட நற்பண்புகள் ஐந்து தருக.
4. இவ்விருவர் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறிய இரண்டு கூற்றுகள் தருக.

# 23

# ஸஹாபாக்கள்

அரபி மொழியில் ஸஹாபா என்பது நண்பர்கள், தோழர்கள் எனப் பொருள்படும். இது பன்மை வடிவமாகும். இதன் ஒருமை வடிவம் ஸஹாபி (தோழர்) என்று சொல்லப்படும். இஸ்லாத்தில் ஸஹாபாக்கள் என்பது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தோழர்களைக் குறிக்கும். ஒருவர் ஸஹாபா என அழைக்கப்படுவதற்குப் பின்வரும் தகுதிகள் வரையறை செய்யப்படுகிறது.

**நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில் வாழ்ந்து அவர்களை நேரடியாகத் தமது கண்களினால் பார்த்து அவர்களை விசுவாசம் கொண்டு கடைசி வரை முஸ்லிமாகவே வாழ்ந்து மரணித்தவர்களே ஸஹாபாக்கள் எனப்படுவர்.** அவர்களில் இருவர் பற்றி நோக்குவோம்.

## பிலால் இப்னு ரபாஹ் ரழியல்லாஹு அன்ஹு

அடிமைகள் மிருகங்களைப் போன்று நடத்தப்பட்ட காலமது. அக்காலச் சந்தைகளில் பொருட்களைப் போலவே அடிமைகளும் விற்பனை செய்யப்பட்டார்கள். அவர்களது உழைப்புக்கு ஊதியமோ, மதிப்போ கிடைக்கவில்லை. சமூகத்தில் மிக இழிவானவர்களாகக் கருதப்பட்டார்கள். இஸ்லாத்தின் வருகையைத் தொடர்ந்து அதனை அவர்கள் ஏற்றுக்கொண்டதன் மூலம் கண்ணியம் பெற்றார்கள். இஸ்லாத்தை வாழவைப்பதற்காகப் பல்வேறு சோதனைகளையும் வேதனைகளையும் பொறுமையுடன் எதிர்கொண்டதன் மூலம் வரலாற்றில் மாமனிதராக மாறினார்கள். பிலால் இப்னு ரபாஹ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களும் இத்தகைய வரலாற்று மனிதர்களில் ஒருவராவார்.

ரபாஹ் என்ற அடிமைக்கும் ஹமாமா என்ற அபீஷீனிய அடிமைப் பெண்ணுக்கும் மகனாகப் பிறந்த பிலால் ரழியல்லாஹு அன்ஹு

அவர்களும் அடிமையாகவே வாழ்ந்தார். கறுப்பு நிறம், மெலிந்த உடல், சுருட்டை முடி, தடித்த உதடுகளைக் கொண்ட பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், சில பேரீத்தம் பழங்களுக்காக மக்காவில் ஜுமஹ் கோத்திரத்தாரின் ஒட்டகங்களையும் ஆடுகளையும் மேய்த்து வந்தார். இவரது எஜமான் உமையா இப்னு கலப் என்பவராவார்.

நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அன்றைய அறபு உலகில் காணப்பட்ட ஏகத்துவத்துக்கு முரணான கொள்கைகளை நிராகரித்து, அவற்றுக்கு எதிராகப் பிரச்சாரம் செய்து வந்தார்கள். தனது எஜமானனும் அவனது சகாக்களும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பிரச்சாரம் பற்றிப் பேசிக் கொள்வதையும் அதனையிட்டுக் கோபப்படுவதையும் பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அவதானித்தார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நற்பண்புகள் பற்றியும் பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிந்துவைத்திருந்தார்கள். ஜுமஹ் வம்சத்தவர்களின் வழிபாடு களும் நம்பிக்கைகளும் அவர்களின் வாழ்வில் எந்த நல்ல மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை என்பதனையும் நன்கு விளங்கி வைத்திருந்தார்கள். எனவே, அவற்றை முழுமையாக வெறுத்த பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஏகத்துவக் கொள்கையால் கவரப்பட்டார்கள். ஒரு நாள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து கலிமாவை மொழிந்து இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள். இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்களில் இவர் ஏழாம் அல்லது எட்டாம் நபராவார்.

பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் இஸ்லாத்தை ஏற்ற செய்தி அவரது எஜமானனுக்கு எட்டியது. இதனால் தனது அடிமை தன்னையும் தனது கடவுள்களையும் இழிவுபடுத்திவிட்டான் என கடும் கோபமடைந்தான். இஸ்லாத்தை விட்டுவிடும்படி அவரை வற்புறுத்தினான். பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தனது கொள்கையில் உறுதியாய் இருந்தார்கள். கொடுமைகள் படிப்படியாக அதிகரித்தன. பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை உமையாவும் அவனது கோத்திரத்தினரும் கடுமையாக அடித்தனர். இரத்தம் வழிந்தோடியது. அவர் மனந்தளரவில்லை. மதிய வேளையில் சுடும் பாலைவன மணலில் அவரை வெறும் மேனியுடன் மல்லாந்து

படுக்கவைத்தனர். அசைய முடியாதவாறு கனத்த பாறாங்கல்லை நெஞ்சின் மேலேற்றி வைத்தனர். தண்ணீரோ, உணவோ, கொடுக்காமல் கொடுமைப்படுத்தினர். அப்போதெல்லாம் ''அஹதுன், அஹதுன்'' (அல்லாஹ் ஒருவன், அல்லாஹ் ஒருவன்) என்றே அவர் கூறினார்.

பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் கழுத்தில் கயிற்றைக் கட்டி சிறுவர்களைக் கொண்டு தெருவெங்கும் இழுத்துச்சென்றார்கள். அவரது உடல் உறுப்புக்களிலிருந்து இரத்தம் வழிந்தோடியது. ஆனாலும் அவரது உள்ளம் மலை போன்று உறுதியாக இருந்தது. பல்வேறு வடிவில் கொடுமைகள் இழைக்கப்பட்ட போதும் நிராகரிப்பாளர்கள் பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்களது உறுதியைக் கண்டு ஆச்சரியப்பட்டனர். இறுதியில் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பத்து பொற்காசு களைக் கொடுத்து பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை விடுதலை செய்தார்கள்.

பின்னர் பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் மதீனாவுக்கு ஹிஜ்ரத் சென்று அங்கே குடியேறினார்கள். எப்போதும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் இருப்பதையே அவர்கள் விரும்பினார்கள். தொழுகைக்காக அதான் சொல்ல வேண்டும் என்ற சட்டம் விதியான போது அப்பொறுப்பை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடமே ஒப்படைத்தார்கள். தனது இனிய குரலால் அதான் கூறி மக்களைத் தொழுகைக்கு அழைத்தார்கள். இஸ்லாமிய வரலாற்றில் முதல் முஅத்தின் என்ற பெருமையும் அவரையே சாரும்.

மக்கா வெற்றியின்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் கஃபாவினுள் முதன் முதலில் நுழைந்த மூவருள் ஒருவரான பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அங்கு முதலில் அதான் கூறும் பாக்கியத்தையும் பெற்றார்கள். அதான் சொல்லும்போதெல்லாம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர் களது நினைவு வருவதன் காரணமாக அவர்களது மரணத்திற்குப் பின் அதான் சொல்வதை நிறுத்திக் கொண்டார்கள்.

தனது இறுதிக்காலப்பகுதியில் சிரியா சென்று அங்கே இஸ்லாமியப் பிரச்சாரத்தில் ஈடுபட்டார்கள். பனூ ஸுஹ்ரா வம்சத்தைச் சேர்ந்த பெண் ஒருவரையும் ஹிந்துல் கூலானிய்யா என்ற பெண்ணையும் மணமுடித் திருந்தார்கள். தனது 70ஆவது வயதில் ஹிஜ்ரி 20ல் டமஸ்கஸில் வபாத்தாகி அங்கேயே நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.

## அம்மார் இப்னு யாஸிர் ரழியல்லாஹு அன்ஹு

''யாஸிரின் குடும்பமே! பொறுமையாய் இருங்கள். நிச்சயமாக உங்களுக்கென வாக்களிக்கப்பட்ட இடம் சுவனமேயாகும்'' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் ஆறுதலும் நன்மாராயமும் கூறப்பட்ட குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவரே அம்மார் இப்னு யாஸிர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆவார்கள்.

அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் தந்தை யாஸிர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் யெமன் நாட்டைச் சேர்ந்தவர். அவர் குறைஷிக் கோத்திரத்தைச் சேர்ந்த அபூஹுதைபா அல் மக்ஸூமி என்பவருடன் ஒப்பந்தம் செய்து மக்காவில் குடியேறினார். தாய் ஸுமையா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் அபூஹுதைபாவின் அடிமைப் பெண்களுள் ஒருவராவார். அடிமைத் தாய்க்கு மகனாகப் பிறந்த அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஓர் அடிமையாக வளர்ந்தார்கள். அடிமைகள் அனுபவித்த எல்லாத் துன்பங்களையும் இவரும் அனுபவித்தார்கள்.

இஸ்லாம் மக்காவில் அறிமுகமான ஆரம்ப கட்டத்திலேயே யாஸிர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் குடும்பம் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டது. ஸுமையா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் ஆரம்ப காலத்தில் இஸ்லாத்தைத் தழுவியோரில் முக்கியமான ஒருவர். இஸ்லாத்தை ஏற்றதன் காரணமாக முழுக் குடும்பத்தினருமே குறைஷியர்களால் கொடுமைப்படுத்தப்பட்டார்கள். அபூ ஜஹ்ல், அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் தாயாரான ஸுமையா ரழியல்லாஹு அன்ஹா அவர்களைக் கொலை செய்தான். இவரே இஸ்லாமிய வரலாற்றில் முதல் ஷஹீத் ஆன பெண்மணி ஆவார். இவரது தந்தையும் குறைஷியர்களாலேயே ஷஹீதாக்கப்பட்டார்கள்.

தனது பெற்றோர் இருவருமே குறைஷியரால் ஷஹீதாக்கப்பட்ட நிலையிலும் அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கொள்கையில் உறுதியாகவே இருந்தார்கள். இதனால் அவர்கள் பல இன்னல்களுக்கு ஆளானார்கள். சிலபோது, உருக்குச் சட்டை அணிவிக்கப்பட்டு வெந்தண லில் கிடத்தப்பட்டார்கள். வேறுசில வேளைகளில் சுடுமணலில் வெறும் மேனியுடன் கிடத்தப்பட்டார்கள். அவ்வாறே, தீயினால் வேதனைப் படுத்தப்பட்டார்கள். பழுக்கக் காய்ச்சிய இரும்பால் முதுகில் சூடுபோடப் பட்டார்கள். தண்ணீருக்குள் தலையை அமிழ்த்தி மூச்சுத் திணறச் செய்யப்பட்டார்கள்.

அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் உடலெங்கும் சித்திர வதை செய்யப்பட்டதற்கான அடையாளங்கள் காணப்பட்டன. குறைஷியர் கள் ஏகத்துவக் கொள்கையை கைவிடுமாறும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை இகழ்ந்துரைக்குமாறும் வற்புறுத்திக் கொடுமைப்படுத்தினார்கள். ஒரு சந்தர்ப்பத்தில் கொடுமை தாங்க முடியாமல் நிராகரிப்புச் சொற்களைக் கூறினார்கள். பின்னர் தான் பெரும் குற்றம் செய்து விட்டதாகக் கருதி, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து நடந்த விடயத்தைக் கூறிக் கவலைப் பட்டார்கள். அப்போது, அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை ஆறுதல்படுத்தி அல்லாஹ் அல்குர்ஆன் வசனமொன்றை இறக்கி வைத்தான்.

‘‘எவருடைய உள்ளம் ஈமான் கொண்டு அமைதி கொண்டிருக்கும் நிலையில் நிர்ப்பந்திக்கப்படுகிறாரோ அவரைத் தவிர யார் ஈமான் கொண்ட பின் அல்லாஹ்வை நிராகரிக்கின்றாரோ எவருடைய நெஞ்சம் குப்ரைக் கொண்டு விரிவாகி இருக்கின்றதோ அத்தகையோர் மீது அல்லாஹ்வின் கோபம் உண்டாகும்;. இன்னும் அவர்களுக்குக் கொடிய வேதனையும் உண்டு.’’ (16:106)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரத் சென்ற போது அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்களும் மதீனாவில் சென்று குடியேறினார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பல சந்தர்ப்பங்களில் அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்கள்.

''அம்மாரின் இறை நம்பிக்கை அவரின் எலும்புகளுக்குள்ளும் ஊடுருவிச் சென்றுள்ளது'' என்றும், இன்னொரு சந்தர்ப்பத்தில் ''யார் அம்மாரைப் பகைத்துக் கொள்கிறாரோ அவர் அல்லாஹ்வுடன் பகைத்துக்கொள்கிறார்'' எனவும் கூறியுள்ளார்கள்.

கலீபா அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் இடம்பெற்ற யமாமா போரிலும் கலந்துகொண்டார்கள். உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் கூபாவின் கவர்னராக நியமிக்கப்பட்டார்கள்.

உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கலகக்காரர்களால் கொலை செய்யப்பட்ட போது முஸ்லிம் சமூகத்தில் கருத்துவேறுபாடுகள் தலைதூக்கின. இதன் விளைவாக ஜமல், சிப்பீன் யுத்தங்கள் இடம் பெற்றன. அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும் முஆவியா ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்குமிடையில் ஹிஜ்ரி 37 இல் இடம்பெற்ற சிப்பீன் யுத்தத்தின்போது அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அலி ரழியல்லாஹு அன்ஹு சார்பாகப் போராடி தனது 93 ஆம் வயதில் ஷஹீதானார்கள். அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அன்னாரின் ஜனாஸாவிற்குத் தொழுகை நடாத்தி நல்லடக்கம் செய்தார்கள்.

## பயிற்சி

பின்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. ஸஹாபாக்கள் எனப்படுவோர் யாவர்?
2. பிலால் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் பெற்றோரின் பெயர் என்ன?
3. ''அஹதுன் அஹதுன்'' என்பதன் பொருள் என்ன?
4. அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் யாருடைய ஆட்சிக் காலத்தில் எப்பகுதிக்கு கவர்னராக நியமிக்கப்பட்டார்கள்?
5. அம்மார் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் எந்த யுத்தத்தின் போது எத்தனையாம் வயதில் ஷஹீதானார்கள்?

24

# நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம்

ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அடுத்து ஷீது அலைஹிஸ் ஸலாம் அவர்கள் நபியாக அனுப்பப்பட்டார். அக்கால மக்கள் இவர்கள் இருவரும் கற்றுக் கொடுத்தவாறு அல்லாஹ்வை ஏக இறைவனாக நம்பி னர். அவனது கட்டளைக்குக் கட்டுப்பட்டு முஸ்லிம்களாக வாழ்ந்தனர். இவ்வாறு மனித குலத்தின் ஆரம்பம் முதல் இஸ்லாம் தான் உலகின் பூர்வீக மார்க்கமாக இருந்து வந்தது.

இவர்களுக்குப் பின்னர் இறை மார்க்கத்தை மக்களுக்குக் கற்றுக் கொடுக்கும் பணியை ஐந்து மார்க்க அறிஞர்கள் செய்து வந்தனர். அல்குர்ஆன் இவர்களை வத்து, சுவாஉ, யஊஸு, யஊகு மற்றும் நஸ்ரு எனக் குறிப்பிடுகின்றது. நாளடைவில் இவர்கள் மக்களுக்கு மத்தியில் பிரபல்யம் அடைந்தனர். அவர்களால் கண்ணியப்படுத்தப்பட்டனர். இந்த அறிஞர்களின் வழிகாட்டலின்படி மக்கள் இஸ்லாத்தை உறுதியாகக் கடைப்பிடித்து வந்தனர். இதனால் மக்களில் எவரையும் ஷைத்தானால் வழிகெடுக்க முடியவில்லை.

இந்த ஐந்து அறிஞர்களும் மரணித்ததைத் தொடர்ந்து அவர்களை கண்ணியப்படுத்த சிலைகளை எழுப்புமாறும் அவற்றை வணங்குமாறும் ஷைத்தான் அம்மக்களைத் தூண்டினான். அன்று முதல் ‘‘ஷிர்க்’’ உலகில் உருவானது.

இச்சந்தர்ப்பத்தில் மக்களை நேர்வழிப்படுத்துவதற்காக நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அல்லாஹ் அனுப்பி வைத்தான். இவர் தொடராக 950 வருடங்கள் ஷிர்கிலிருந்து விலகி அல்லாஹ்வை மாத்திரம் வணங்குமாறு அவர்களை அழைத்தார். இப்பணியை அவர் இரவு பகலாகச் செய்தார். தனிநபர்களிடம் இரகசியமாக அச் செய்தியை எத்தி வைத்தார். மக்கள் ஒன்றுசேரும் இடங்களில் பகிரங்கமாகவும் அழைத்தார். அம் மக்களோ அந்தச் செய்தி தமது காதுகளை சென்றடையாது இருக்க விரல்களால் அடைத்துக் கொண்டார்கள். நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம்

அவர்களைக் காணும்போது தங்களது ஆடைகளால் தமது முகத்தை மறைத்துக் கொண்டார்கள். அவரது சமூகத்தில் சொற்ப தொகையினர் மாத்திரமே ஈமான் கொண்டனர். மனைவியும் ஒரு மகனும் கூட இவரை ஏற்காது நிராகரித்தனர்.

நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் இறைவன் ஒருவனே என்பதை நிரூபிக்க இயற்கையிலுள்ள அத்தாட்சிகள் பலதைக் காட்டித் தமது சமூகத்தாருடன் வாதாடினார். அவர்களோ இவரைக் கடுமையாகத் தாக்கினர். சொல்ல முடியாத துன்பத்தைக் கொடுத்தனர். சத்தியத்தின் பக்கம் எவ்வாறு அழைத்தாலும் இவர்கள் நம்பிக்கை கொள்ளவே மாட்டார்கள் என அல்லாஹ் நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அறிவித்தான். அப்படியாயின் இவர்களைத் தண்டித்து அழித்துவிடுமாறு அவர் அல்லாஹ்விடம் பிரார்த்தித்தார்.

அல்லாஹ் காபிர்களை அழிக்க ஒரு பிரளயத்தை அனுப்பப் போவதாக அவருக்கு அறிவித்தான். அவ்வேளை விசுவாசிகளைக் காப்பாற்ற ஒரு கப்பலைக் கட்டுமாறு அல்லாஹ் அவரைப் பணித்தான். அதற்கான வழிகாட்டலையும் அவருக்கு வழங்கினான். பாலைவனத்தில் கப்பல் கட்டும் பணி நீண்ட நாட்களாக நடந்தது. அதனைக் கடந்து செல்லும் காபிர்கள் அவரைப் பரிகசித்தனர். நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அதற்கு ‘‘உங்களைப் பார்த்து நாமும் பரிகசிக்கும் ஒரு நாள் வரும்!’’ எனப் பதில் கூறினார்.



ஜூதி மலையும் கப்பலின் தரை தட்டிய அடையாளச் சிதைவுகளும்

ஒரு நாள் ஓர் அடுப்பைப் பிளந்து கொண்டு திடீரென நீர் பொங்கிப் பிரவாகித்து ஓடத் தொடங்கியது. உடனே சோடிகளாக அனைத்து ஜீவராசிகளையும், முஃமின்களையும் மற்றும் ஈமான் கொண்ட நூஹ் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் குடும்பத்தினரையும் கப்பலில் ஏற்றிவிடுமாறு அல்லாஹ் பணித்தான். நீர் பிரளயமாக மாறியது. இப்பிரளயமே 'தூபான்' எனப்படுகின்றது. விசுவாசிகள் பிஸ்மில் கூறிப் பயணிக்க ஆரம்பித்தனர். பிரளயத்தில் மலைகள் போன்ற அலைகளுக்கு மத்தியில் கப்பல் மிதந்தது. ஒதுக்குப் புறமாக ஓர் இடத்தில் நின்ற தன் மகனைப் பார்த்து நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம், ''மகனே! எங்களோடு கப்பலில் ஏறுங்கள். காபிர்களோடு சேர்ந்திருக்க வேண்டாம்'' என சப்தமிட்டுக் கூறினார். அதற்குப் பிடிவாதக்கார அந்த மகன், ''நான் மலையில் ஏறித் தப்பிக் கொள்வேன்'' எனப் பதிலளித்தான்.

அதற்குள் திடீரென ஒரு பாரிய அலை குறுக்கிட்டு அவனையும் உடன் இருந்த காபிர்களையும் அடித்துச் சென்றது. அவர்கள் அனைவரும் நீரில் மூழ்கி விட்டனர். பிரளயம் வற்ற ஆரம்பித்தது. வானம் நீரைக் கொட்டாது நிறுத்திக் கொண்டது. ''ஜூதி'' என்ற மலையின் மீது கப்பல் தரை தட்டியது.

இச்சந்தர்ப்பத்தில் நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு மகனின் நினைவு வருகிறது. தனது குடும்பத்தாரை அல்லாஹ் காப்பாற்றுவதாக அளித்த வாக்குறுதி பற்றி அவனிடம் முறையிட்டார். அதற்கு, ''இஸ்லாத்தை ஏற்காத அவன் உமது குடும்பத்தைச் சேர்ந்தவனல்லன்'' என அல்லாஹ் கூறினான்.

இறுதியாக, நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களையும் காப்பாற்றப்பட்ட அவரது சமூகத்தினரையும் கப்பலில் இருந்து பத்திரமாக இறங்குமாறு அல்லாஹ் வேண்டினான். மேலும் பூமியில் பரகத் பெற்ற ஒரு புது வாழ்வை ஆரம்பிக்குமாறும் அவன் கூறினான். அன்று முதல் அவர்களிலிருந்து பல்கிப் பெருகியவர்களே இன்றைய மனித குலத்தினர் ஆவர். இதனால் நபி நூஹ் அலைஹிஸ் ஸலாம் ''அபுல் பஷர் அஸ்ஸானி'' (மனித குலத்தின் இரண்டாம் தந்தை) என அழைக்கப்படுகிறார்.

## பயிற்சி

அ. சரி, பிழை கூறுக.

1. இஸ்லாம் தான் உலகின் பூர்வீக மார்க்கம். ( )
2. ஆதம் அலைஹிஸ்ஸலாம் காலத்திலே உலகில் ஷிர்க் காணப் பட்டது. ( )
3. நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் புத்திரர்களில் ஒருவர் காபிராவார். ( )
4. கடற்கரையில் கப்பல் கட்டும் பணி நடந்தது. ( )
5. பிரளயத்தில் நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மனைவியும் மூழ்கினாள். ( )

**ஆ. சுருக்கமான விடை தருக.**

1. நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் சிறப்புப் பெயர் யாது?
2. நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் எத்தனை வருடம் பிரச்சாரம் செய்தார்கள்?
3. நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கப்பல் எம்மலை மீது தரை தட்டியது?
4. நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் எவ்வாறு பிரச்சாரம் செய்தார்கள்?
5. நபி நூஹ் அலைஹிஸ்ஸலாம் எச்சூழலில் நபியாக அனுப்பப்பட்டார்கள்?

25

# அவ்ரத்தைப் பேணி நடப்போம்

يٰبَنِىٓ اٰدَمَ قَدْ اَنْزَلْنَا عَلَيْكُمْ لِبَاسًا يُّوَارِىْ سَوْاٰتِكُمْ وَرِيْشًا

**''மனிதர்களே! உங்களுடைய மானத்தை மறைக்கக்கூடிய ஆடையையும் அலங்காரத்தையும் திட்டமாக நாம் உங்களுக்கு இறக்கி வைத்திருக்கின்றோம்'' (07 : 26)**

நாம் எவ்வாறு வாழ வேண்டும் என்பதைக் கற்றுத்தர வந்த இறை மார்க்கமே இஸ்லாமாகும். இந்த மார்க்கத்தின் போதனைகள் இனிமையானவை. எளிமையானவை. அருள் நிறைந்தவை. அது மட்டுமல்ல முழு மனித வாழ்வுக்கும் பூரணமான வழிகாட்டலை வழங்குபவை. முஸ்லிம்களாகிய நாம் அவற்றை முடிந்தளவு நடைமுறைப்படுத்துவது எம்மீதான மார்க்கக் கடமையாகும்.

உடை, உறையுள் தொடர்பான இஸ்லாத்தின் போதனைகள் உன்னத மானவை. அது ஆண் - பெண் தனிமனிதர்களுக்குத் தனித்தனியான ஆடை அணியும் விதிமுறைகளைக் கடமையாக்கியுள்ளது. இது அவ்ரத் என அழைக்கப்படும். கட்டாயம் மறைக்க வேண்டிய பகுதிகளையே அவ்ரத் என்ற பதம் குறிக்கின்றது.

முஸ்லிம்களாகிய நாம் ஆடை அணியும்போது இரண்டு விடயங்கள் கவனத்தில் கொள்ளப்பட வேண்டும். முதலாவது அவ்ரத் பேணப்படுதல். இரண்டாவது அழகு. அல்லாஹ் அழகானவன். நாம் அழகாக இருப்பதையே அவன் விரும்புவான்.

**''மனிதர்களே! உங்களுடைய மானத்தை மறைக்கக்கூடிய ஆடையையும் அலங்காரத்தையும் திட்டமாக நாம் உங்களுக்கு இறக்கி வைத்திருக்கின்றோம்'' (அல்அஃராப் : 26)**

இந்த அல்குர்ஆன் வசனம், ஆடையானது அவ்ரத்தை மறைப்பதாகவும் அழகாகவும் அமைய வேண்டும் என்ற கருத்தை உள்ளடக்கி இருப்பதைக் காணலாம்.

அவ்ரத் என்பதை ஆண் - பெண் வேறுபாட்டிற்கு ஏற்ப அல்லாஹ் வரையறை செய்துள்ளான். ஆண் - பெண் என்ற வேறுபட்ட மனித

சோடிகளைப் படைத்தவன் அல்லாஹ். அவர்களிருவரதும் வேறுபட்ட தேவைகளையும் இயல்புகளையும் அவனே மிகச் சரியாக அறிவான். எனவே அந்த வேறுபாடுகளுக்கு ஏற்ப அவ்விருவருக்குமான வேறுபட்ட அவ்ரத்தை அல்லாஹ்தான் வரையறை செய்ய வேண்டும். நாம் எமது மனோ இச்சைப்படி வரையறை செய்ய இயலாது.

ஆண்களின் அவ்ரத் தொப்புளுக்கும் முழங் காலுக்கும் இடைப்பட்ட பகுதியாகும். இப்பகுதி எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மறைக்கப்படுவது வாஜிபாகும். இப்பகுதியை மறைக்கும் ஆடைகள் மெல்லியதாகவோ, உடலோடு ஒட்டியதாகவோ அமைவதைக் கட்டாயம் தவிர்க்க வேண்டும். தொழும்போது அவ்ரத் (தொப்புளுக்கு நேரான இடுப்புப் பகுதி) வெளிப்பட்டால் தொழுகை முறிந்துவிடும் என்பது கவனத்தில் கொள்ளப்பட வேண்டும்.

பெண்களைப் பொறுத்தவரை அவர்களது முகம், மணிக்கட்டுகள் வரையிலான இரு கைகள் தவிர்ந்த ஏனைய பகுதிகள் கட்டாயம் மறைக்கப்பட வேண்டும். இப்பகுதிகளை மறைக்கும் ஆடைகள் உள்மேனியைக் காட்டாத கனதியான துணியால் தளர்வாக அமைந்திருக்க வேண்டும். விரசமானதாகவோ வீண்விரயமுடையதாகவோ இருக்கக் கூடாது. மேலே உள்ள (7 : 26) அல்குர்ஆன் வசனம் ஆண் - பெண் இருபாலாருக்கும் உரிய வழிகாட்டலையே கொண்டுள்ளது. அந்த வசனத்தில் கூறப்பட்டுள்ள அம்சங்களும் பெண்களின் ஆடைகளிலும் கவனிக்கப்பட வேண்டும். மேலும்

''ஆண்கள், பெண்களுக்குரிய ஆடைகளை அணிவதையும், பெண்கள் ஆண்களுக்குரிய ஆடைகளை அணிவதையும் இஸ்லாம் ஹராமாக்கி உள்ளது'' எனவும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறியுள்ளார்கள்.

தொழும்போது கால்களை மறைக்கும் விடயத்தில் பெண்கள் கரிசனை காட்ட வேண்டும். பெண்கள் தங்கள் கணவன்மாருக்கு அழகாக

இருப்பதற்காக அஜ்னபிகள் இல்லாத சூழலில் வழக்கமான சாதாரண ஆடைகளோடு வீட்டினுள் இருக்கலாம். கணவருக்குக் கவர்ச்சி காட்டும் விதமாகப் பெண்கள் மருதாணி இடுவதும் கண்களை அழகாக வைத்திருப்பதும் வீட்டுச் சூழலில் அனுமதிக்கப்பட்ட அம்சங்களாகும். வீட்டுக்கு வெளியே பெண்கள் செல்லும்போது சத்தமுள்ள சலங்கைகளை அணிவதையும் உதட்டுச் சாயம் பூசுவதையும் தவிர்த்துக்கொள்ள வேண்டும். பெண்களின் சத்தம் உயராத மனைகளே மகிழ்ச்சி கொள்ளும் மாளிகைகளாகும்.

பெண்கள் தங்க, வெள்ளி ஆபரணங்களை அணியலாம். ஆண்களைப் பொறுத்தவரை தங்கம், பட்டாடை அணிவது ஹராமாக்கப்பட்டுள்ளது. வெள்ளி மோதிரம் அணிவதற்கு ஆண்களுக்கு அனுமதியுண்டு.

அஜ்னபி, மஹ்ரமி கலப்புக்கள் வீட்டுச் சூழலில் இடம்பெறாத விதமாக இஸ்லாமிய ஷரீஆ கூறும் ஒழுக்க வரையறைகள் பேணப்படல் வேண்டும். அறைகளுக்குள் திரைச்சீலை இருப்பது வரவேற்கத்தக்க விடயமாகும். பொது நிகழ்வுகளின்போது ஆண்கள் வேறாகவும் பெண்கள் வேறாகவும் நடமாடுவதற்கு வீட்டுச் சூழலில் ஏற்பாடுகளை மேற்கொள்வது இஸ்லாமிய வழிமுறையாகும். அதன் மூலம் ஷரீஆ தடுத்துள்ள அஜ்னபி - மஹ்ரமி கலப்பைத் தவிர்க்கலாம்.

பெண்கள் சாதாரண ஆடையுடன் சுதந்திரமாக நடமாடும் இடம் வீடாகும். எனவேதான் பிறர் மனைகளில் நுழைவதற்கான விதிமுறைகளை இஸ்லாம் காட்டித் தந்துள்ளது. திடீரென வீடுகளுக்குள் நுழைந்து விட லாகாது. மூன்றுமுறை கதவில் தட்டியோ, மணியை அழுத்தியோ, வாயால் அழைத்தோ அனுமதி பெறலாம். அனுமதி கிடைக்காவிட்டால் அல்லது வீட்டினுள் யாருமில்லை என்று தெரிந்துவிட்டாலோ அவ்வீட்டினுள் நாம் நுழையாமல் திரும்பிச் சென்றுவிடுவதுதான் கௌரவம் என்பதாக ஸூரா நூர் 28 ஆம் ஆயத்தில் அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான். மனை நாடி வருபவரை வரவேற்பதற்கோ, மறுப்பதற்கோ வீட்டாருக்கு உரிமை உண்டு.

அனுமதிக்காக காத்திருக்கும் போது வீட்டின் முன்வாசலுக்கு நேராக நிற்காமல் சற்று ஒதுங்கி நிற்பதே கௌரவமாகும். ஜன்னல்களினூடாக உள்ளே எட்டிப் பார்ப்பதை இஸ்லாம் வன்மையாகக் கண்டிக்கிறது. அவ்வாறு எட்டிப் பார்ப்பவர்களது கண்கள் குத்தப்படும் நிலைமைகளும் உருவாகலாம் என ஹதீஸ்களில் எச்சரிக்கப்பட்டுள்ளது. இவ்வாறான

சூழல் உருவாகாமல் இருக்க யன்னல்களுக்கும் திரைச்சீலை இடுவது விவேகமான அம்சமாகும்.

பொருத்தமான சந்தர்ப்பங்கள், நேரங்களைக் கவனத்திற்கொண்டே பிறர் வீடுகளுக்குச் செல்ல வேண்டும். உண்ணும் நேரம், உறங்கும் நேரம், வீட்டில் விருந்தாளிகள் இருக்கும் நேரம் போன்றவற்றில் பிறர் வீடுகளுக்குச் செல்வதைத் தவிர்ப்பதே இஸ்லாம் காட்டித்தரும் இனிய வழிமுறையாகும்.

சொந்த வீட்டிற்குள்ளேயும் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள் உண்டு. பருவ வயதை அடையாத சிறிய பிள்ளைகள் பெற்றோர்களின் அறையில் நுழைவதற்கு மூன்று சந்தர்ப்பங்களில் அனுமதி பெற வேண்டும் என்பதாக ஸூரா நூரின் 58 ஆவது வசனம் குறிப்பிடுகின்றது. பஜ்ருத் தொழுகைக்கு முன்னரும் பகல் பொழுதில் மேலதிக ஆடைகளைக் களைந்து வைத்திருக்கும் நேரத்திலும் இஷாத் தொழுகைக்குப் பின்னரும் இப்பருவத்தினர் அனுமதி பெற்றே வீட்டினுள் இருக்கும் பெற்றோரின் அறையில் நுழைய வேண்டும் என அல்-குர்ஆன் கூறுகின்றது. இவ்வாறாக இஸ்லாம் காட்டித்தரும் இனிய போதனைகளையும் ஒழுக்கங்களையும் (ஆதாப்) எமது வீட்டுச் சூழலில் அனுசரித்து நடப்போம். வீட்டினுள் கடைப்பிடிக்க வேண்டிய அவ்ரத்துக்களையும் பேணி நடப்போம். அதன் மூலம் எமது உள்ளங்களும் இல்லங்களும் ஆன்மீகத்தால் பிரகாசமடையும். அல்லாஹ்வின் ரஹ்மத்தும் பரகத்தும் வீட்டிலுள்ளோருக்கும் கிட்டும். வீட்டாருக்கு மத்தியில் அன்பும் அமைதியும் இன்பமும் நிலவும். இதன்மூலம் சிறந்த இஸ்லாமியக் குடும்பம் உருவாகும். சிறந்த இஸ்லாமியக் குடும்பங்களிலேயே நாட்டிற்குத் தேவையான நற்பிரஜைகளும் உலகம் தேடும் ஸாலிஹான மனிதர்களும் உருவாகுவர் என்பது திண்ணம்.

## பயிற்சி

பொருத்தமான சொற்களை வைத்து வெற்றிடங்களை நிரப்புங்கள்.

1. ............. என்பது உடலில் கட்டாயமக மறைக்க வேண்டிய பகுதிகளைக் குறிக்கும்.
2. உடையணியும்போது அவ்ரத்தையும் .......................... கவனத்திற் கொள்ள வேண்டும்.
3. அவ்ரத் ஆண்களுக்கும் ........................ வெவ்வேறான வரையறைகளைக் கொண்டுள்ளது.
4. ஆண்களின் அவ்ரத் ........................ முதல் முழங்காலுக்கு இடைப்பட்ட பகுதியாகும்.
5. பெண்கள் ......................., மணிக்கட்டு வரையிலான கைகள் தவிர்ந்த ஏனைய பகுதிகளை மறைக்க வேண்டும்.
6. ஆண்கள் பெண்களின் ஆடைகளையும் பெண்கள் ஆண்களின் ஆடைகளையும் அணிவது ............ ஆகும்.
7. முஸ்லிமுடைய ஆடை கனதியான துணியாலும் ............ வான நிலையிலும் இருக்க வேண்டும்.
8. வீட்டுக்கு வெளியே செல்லும்போது பெண்கள் .................. வீசக் கூடியதும், ஒலி எழுப்பக் கூடியதுமானவற்றைத் தவிர்க்க வேண்டும்.
9. ............................ வேளையில் மற்றவர்களின் வீட்டுக்குச் செல்வதைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும்.
10. பெற்றோரின் அறைக்குச் செல்லும்போது .......................... பெற வேண்டும்.

26

# இஸ்லாமிய இல்லம்

இவ்வுலகில் படைக்கப்பட்டுள்ள ஒவ்வொரு உயிரினத்திற்கும் அல்லாஹ்வினால் வழங்கப்பட்டுள்ள அருள்களுள் ஒன்றே உறைவிடமாகும். உணவு, உடை போன்றே ஒவ்வொரு உயிரினமும் தனக்கான உறைவிடத்தை தேடிக்கொள்வதற்கான முயற்சிகளை மேற் கொள்வதை நாம் காண்கிறோம். அவ்வாறே, மனிதனுக்கு அல்லாஹ் வினால் வழங்கப்பட்டுள்ள பல்வேறு பாக்கியங்களில் ஒன்றாக அமைதியான இல்லத்தை இஸ்லாம் கருதுகிறது.

## இஸ்லாமிய இல்லம் அமைதியின் தளம்

இஸ்லாம் குடும்ப வாழ்க்கைக்கு முக்கியத்துவம் அளிக்கிறது. அந்தக் குடும்பம் என்ற அலகு அழகானதோர் இல்லத்தின் மூலமே ஆரோக்கியமாக உருவாகும் என்பது இஸ்லாத்தின் கருத்தாகும். இதனை அல்லாஹ் தனது திருமறை வாயிலாக நமக்குச் சுட்டிக் காட்டுகின்றான்:

அல்லாஹ் உங்களுக்கு உங்கள் இல்லங்களை அமைதித் தளமாக ஏற்படுத்தியுள்ளான். (16:80)

## இறை நினைவில் இனிய இல்லம்

ஒரு முஃமினுடைய வீடு, இறைவனை நினைவுகூரும் இல்லமாக இருக்க வேண்டும். அங்கு இறை வசனங்கள் ஓதப்பட வேண்டும். மார்க்கம் போதிக்கப்பட வேண்டும். ‘‘உங்கள் வீடுகளில் கூறப்படும் அல்லாஹ்வின் வசனங்களையும், ஞானத்தையும் நினையுங்கள்! அல்லாஹ் நுணுக்கமானவனாகவும், நன்கறிந்தவனாகவும், இருக்கிறான்’’ *(அல் குர்ஆன் 33:34)*

இறைவன் நினைவுகூரப்படும் இல்லத்திற்கும் இறை நினைவை இழந்த இல்லத்திற்கும் இறைத்தூதர் காட்டும் உவமையைப் பாருங்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:

அல்லாஹ் நினைவுகூரப்பட்டுப் போற்றப்படும் இல்லத்தின் நிலை உயிருள்ளவர்களின் நிலைக்கும், அல்லாஹ் நினைவுகூரப்பட்டுப் போற்றப்படாத இல்லத்தின் நிலை உயிரற்றவனின் நிலைக்கும் ஒத்திருக் கிறது. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: உங்களது தொழுகைகளில் சிலவற்றை உங்களுடைய இல்லங்களிலும் நிறைவேற்றுங்கள். உங்களுடைய இல்லங்களை கப்று (புதைகுழி)களாக ஆக்கிவிடாதீர்கள். (புகாரி)

நாம் உயிரோடு இருந்தும் நம்முடைய வீட்டில் இறைவன் நினைவுகூரப்படவில்லையென்றால், அங்கு மார்க்க ஞானங்கள் போதிக்கப்பட வில்லை என்றால் நம்முடைய வீடும், கப்ரும் ஒன்று தான். ஒரு சிறிய வித்தியாசம் அங்கு உயிரிழந்தவர்கள் உள்ளார்கள். இங்கு உள்ளம் மரணித்தவர்கள் உள்ளார்கள்.

''உங்கள் வீடுகளில் ஸூரத்துல் பகராவை ஓதுங்கள்! ஏனெனில் எந்த வீட்டில் ஸூரத்துல் பகறா ஓதப்படுகின்றதோ அந்த வீட்டில் ஷைத்தான் நுழைய மாட்டான்!'' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (தபரானி)

## வீடு அமைதியின் அடித்தளம்

''உங்கள் வீடுகளை அல்லாஹ் உங்களுக்கு அமைதி தருவதாக அமைத்தான். கால்நடைகளின் தோல்களை நீங்கள் வீடுகளாக அமைக்க (வசதியான விதத்தில்) உங்களுக்காக அவன் படைத்திருக்கிறான். அது நீ ங்கள் பிரயாணம் போகும் சமயத்திலும் ஓரிடத்தில் தங்கும் சமயத்திலும் எளிதில் சுமந்து செல்லக் கூடியதாக இருக்கின்றது...'' (16:80)



இந்த வசனம் வீடு என்பது மனிதனுக்கு அமைதியையும், பாதுகாப்பையும், சுதந்திரத்தையும் வழங்கும் இடமாக இருப்பதைத் தெளிவுபடுத்துகின்றது.

''தனது வீட்டில் ஒருவர் அமர்ந்து அதனால் அவரது பிரச்சினையிலிருந்து மக்களும், மக்களது பிரச்சினையிலிருந்து அவரும் பாதுகாப்புப் பெறுகின்றாரோ அத்தகைய மனிதர் அல்லாஹ்வின் பொறுப்பில் இருக்கின்றார்''

## இஸ்லாமிய இல்லம் ஒரு கல்விக் கூடம்

வீட்டைக் கல்விக் கூடமாகப் பாவிப்பது மிக அவசியமாகும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தமது மனைவியருக்கு வீட்டில் வைத்துத்தான் மார்க்கத்தைப் போதித்தார்கள். குழந்தைகளுக்கு இஸ்லாமியப் பழக்க வழக்கங்களைக் கற்றுக் கொடுத்தார்கள். எனவே எமது வீடுகளும் கல்வியைத் தூண்டும் விதத்தில் அமையப்பெறுதல் வேண்டும். ஆல்குர்ஆன் ஓதுதல், இஸ்லாமிய நூல்களை வாசித்தல், அறிவியல் ரீதியான இறுவட்டுக்கள், சஞ்சிகைகள் என்பவற்றை வைத்திருத்தல் என்பன வரவேற்கத்தக்கனவாகும்.



## வீட்டுச் சூழலில் கடைப்பிடிக்க வேண்டியவை

1. வீட்டினுள் நுழைய முன் ஸலாம் கூறிக்கொள்ளல். பதில் ஸலாம் கிடைத்தால் மட்டுமே உள்ளே நுழைய வேண்டும். இதனை ஏற்கனவே நாம் கற்ற பின்வரும் வசனம் தெளிவுபடுத்துகின்றது.

"விசுவாம் கொண்டோரே! உங்கள் வீடுகள் அல்லாத வேறு வீடுகளில் நீங்கள் நுழைய அவசியம் ஏற்பட்டால் அவ்வீடுகளில் உள்ளவர்களிடம் நீங்கள் அனுமதி கோரி அவ்வீடுகளில் உள்ளோருக்கு ஸலாம் கூறாத வரை (அவற்றில்) நுழைய வேண்டாம்" (24:27)

அங்கே எவரையும் நீங்கள் காணாவிட்டால் உங்களுக்கு அனுமதி அளிக்கப்படும் வரை அங்கே நுழையாதீர்கள்! "திரும்பி விடுங்கள்!" என்று உங்களுக்குக் கூறப்பட்டால் திரும்பி விடுங்கள்! அதுவே உங்களுக்குப் பரிசுத்தமானது. நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் அறிந்தவன். (24 : 28)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒருவருடைய இல்லத்திற்குச் செல்லும்போது மூன்று முறை ஸலாம் கூறி அனுமதி கோருவார்கள். பதில் வந்தால் வீட்டின் உள்ளே செல்வார்கள். இல்லையென்றால் திரும்பிச் சென்றுவிடுவார்கள்.

2. வீட்டினுள் நுழையும்போது

بِسْمِ اللهِ وَلَجْنَا, وَبِسْمِ اللهِ خَرَجْنَا, وَعَلَى اللهِ رَبَّنَا تَوَكَّلْنَا

என்று ஓதிக் கொள்ளல்

3. குடும்பத்தில் அனைத்து உறவினர்களுடனும் சகோதரத்துவத்துடன் நடந்துகொள்ளல். விட்டுக்கொடுத்தல், தர்மம் செய்தல், விருந்தோம்பல், இங்கிதமாகப் பேசுதல் போன்ற நற்பழக்கங்களைக் கடைப்பிடித்தல்.

4. பொய், பொறாமை, கோள், புறம் போன்ற குடும்ப உறவுகளைப் பாதிக்கும் மோசமான பண்புகளை விட்டும் தவிர்ந்து கொள்ளல்.

5. எப்போதும் வீட்டையும் வீட்டுச் சூழலையும் சுத்தமாகவும் அழகாகவும் வைத்திருத்தல்.

6. வீட்டுப்பாவனைப் பொருட்களை ஒழுங்காகவும் நேர்த்தியாகவும் சுத்தமாகவும் வைத்திருத்தல்

## பயிற்சி

(அ) பின்வரும் கூற்றுக்கள் சரியாயின் (சரி) எனவும், பிழையாயின் (பிழை) எனவும் எழுதுக.

1. வசதியான உறைவிடம் கிடைப்பது அல்லாஹ்வின் அருளாகும். ( )
2. வீடு அல்லாஹ்வை நினைவுபடுத்தும் இடமாக இருக்க வேண்டியதில்லை. ( )
3. வீட்டைப் புதைகுழிகளாக்க வேண்டாமென நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குறிப்பிட்டார்கள். ( )
4. குடும்ப அலகு வீட்டிலேயே அமைதி பெறுகிறது. ( )
5. உறைவிடம் எல்லாப் படைப்பினங்களுக்கும் பாதுகாப்பு வழங்குகிறது. ( )
6. வீட்டுக்கு வருபவரைத் ''திரும்பிவிடுங்கள்'' எனக் கூறுவதை வழக்கமாக்கிக் கொள்ள வேண்டும். ( )
7. வீட்டையும் சூழலையும் சுத்தமாக வைப்பது நல்ல பழக்க மாகும். ( )

(ஆ) வீட்டில் பேண வேண்டிய ஒழுக்கங்கள் ஐந்தைக் குறிப்பிடுக.

(இ) வீடானது எவ்வாறு கல்விக் கூடமாக இயங்க முடியும் என்பதை எடுத்துக்காட்டுக.

# 27

# பொதுச் சொத்துக்களைப் பாதுகாப்போம்

ஏழாம் தர மாணவர்கள் இஸ்லாம் பாடவேளையின்போது பாட ஆசிரியர் நிஸ்பர் அவர்களுடன் பாடசாலை வளாகத்திற்குள் ஒரு களத் தேடலை மேற்கொண்டார்கள். ஆசிரியரின் வழிப்படுத்தலுக்கு ஏற்ப அவர்கள் பாடசாலை வளாகத்திற்குள் காணப்படும் பொதுச் சொத்துக்கள், பௌதீக வளங்கள் என்பவற்றைப் பாடக்குறிப்பு புத்தகத்தில் எழுதிக் கொண்டனர். பாடசாலைச் சூழலுக்குள் தரம் ஏழு மாணவர்கள் அனைவரும் ஒன்றிணைந்து மேற்கொண்ட அந்தக் குறுகிய நேரக் களப் பயணம் மாணவர்களுக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தியது. பயணம் நிறைவடைந்ததும் மைதானத்துக்கு அருகே கிளை பரப்பி நிழல் தரும் ஆல மர நிழலில் ஆசிரியருடன் மாணவர்கள் கலந்துரையாடலுக்காக அமர்ந்து கொண்டார்கள்.

ஆசிரியர்: பிள்ளைகளே நான் ஏற்கனவே குறிப்பிட்டது போல பாட சாலை வளாகத்திற்குள் நிறைய வளங்கள், சொத்துக்கள் இருப்பதை நீங்கள் அறிந்திருப்பீர்கள். உங்களுடைய குறிப்பு புத்தகத்தில் நீங்கள் எழுதிக் கொண்ட சில பொதுச் சொத்துக்கள், வளங்களைக் குறிப்பிடுங்கள்.

ஸய்யாப்: வகுப்பறைக் கட்டடங்கள், காரியாலயம், மைதானம், வாசிக சாலை, விஞ்ஞான ஆய்வுகூடம், மனையியல் ஆய்வுகூடம், மரங்கள், குழாய்க் கிணறு, தொழுகை அறை, மலசலகூடம், கதிரை மேசைகள், அலுமாரிகள், பாடப் புத்தகங்கள், சிறுவர் பூங்கா

ஆகிப்: எமது குறிப்புப் புத்தகத்தில் எழுதியிருப்பவற்றைப் பார்க்கும் போது பாடசாலைக்குள் இவ்வளவு பொதுச் சொத்துக்கள் இருக்கின்றனவா என்பது ஆச்சரியத்தை தருகிறது.

ஆசிரியர்: ஆம், எமது பாடசாலை வளாகத்திற்குள்ளும் அதற்கு வெளி யிலும் நிறையச் சொத்துக்கள் காணப்படுகின்றன. பொதுவாக

நாம் காணும் சொத்துக்களைத் தனியார் சொத்துக்கள், பொதுச் சொத்துக்கள் என இரண்டாகப் பிரித்துக் கூறலாம். தனியார் சொத்துக்களைக் கவனிப்பதில் அவரவர் அக்கறை செலுத்து வார்கள். பொதுச் சொத்துக்களைக் கவனிப்பது ஒவ்வொரு வருடையதும் பொறுப்பாகும். பொதுச் சொத்துக்கள் என்பது பொது மக்கள் நலனுக்காக அரசாங்கத்தினால் அல்லது சமூக நிறுவனங்களினால் நிர்மாணிக்கப்பட்டவை. சில தனி நபர்களினால் மக்களின் நலனுக்காக வக்ப் செய்யப்பட்டவை உட்பட அல்லாஹ்வினால் இயற்கையாகத் தரப்பட்ட நீர், ஆறு, கடற்கரை, காடு முதலானவற்றையும் பொதுச் சொத்துக்கள் எனக் குறிப்பிடலாம்.

நவீட்: அப்படியாயின் அரசாங்கத்தினால் உருவாக்கப்பட்டுள்ள பாட சாலைகள் தவிர்ந்த வைத்தியசாலைகள், பாதைகள், புகையிரத நிலையங்கள் போன்றவையும் இதற்குள் உள்ளடங் குமல்லவா?

ஆசிரியர்: மாஷா அல்லாஹ் நவீட் குறிப்பிட்டது போன்ற விடயங்களும் அவை தவிர பஸ் தரிப்பிடம், பொது மலசலகூடம், பொதுக் கிணறுகள், பொதுப் போக்குவரத்துச் சாதனங்கள், ஆறுகள், நீர் வீழ்ச்சி, பூங்கா, கடற்கரை, பல்கலைக்கழகம், மஸ்ஜித்கள், மத்ரஸாக்கள், மையவாடிகள் என்பனவும் பொதுச் சொத்துக் களுள் அடங்கும்.



ஆகிப்: இவை அனைத்தையும் பாதுகாப்பது அரசாங்கத்தின் பொறுப்பு தானே?

ஆசிரியர்: ஆம். பொதுச் சொத்துக்களை அமைத்து அவற்றைப் பாது காப்பது அரசாங்கத்தினது மட்டுமன்றி நாட்டில் உள்ள ஒவ்வொரு குடிமகனினதும் பொறுப்பாகும். அவ்வாறே பொதுச் சொத்துக்களைப் பாதுகாப்பது ஒவ்வொரு தனி நபரினதும் முக்கிய பொறுப்பு என இஸ்லாம் கருதுகிறது. ''நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்பாளர்கள். உங்களுடைய பொறுப்புக்கள் பற்றி நீங்கள் மறுமையில் விசாரிக்கப்படு வீர்கள்'' என்ற ஹதீஸுக்கு ஏற்ப பொதுச் சொத்துக்களைப் பயன்படுத்துவது, அக்கறையுடன் பாதுகாப்பது தொடர்பிலும் நாம் விசாரணைக்கு உட்படுத்தப்படுவோம் என்ற எண்ணம் எப்போதும் எமது உள்ளங்களில் இருக்க வேண்டும். பொதுச் சொத்துக்கள் ஒவ்வொன்றும் அல்லாஹ்வினால் எமக்கு வழங்கப்பட்டுள்ள அருள் என்பதை நாம் உணர்ந்துகொள்ள வேண்டும். அப்போதுதான் அவற்றை நாம் அமானிதமாகக் கருதிப் பாதுகாக்கும் எண்ணம் எமது மாணவப் பருவத்திலேயே உருவாகிவிடும். இஸ்லாமிய வரலாற்றில் பொதுச் சொத்துக் களை மிகக் கவனமாக பயன்படுத் தியமைக்கும், அக்கறையுடன் அவற்றைப் பராமரித்தமைக்கும் நிறைய உதாரணங்கள் இருப்பதைக் காணலாம்.

நுஸ்ஹா: அப்படியாயின் அவ்வாறானதொரு வரலாற்றுச் சம்பவத்தை எங்களுக்கு படிப்பினைக்காகக் கூறுங்கள்.

ஆசிரியர்: ஒரு தடவை இரண்டாம் கலீபா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நோய்வாய்ப்பட்டிருந்தார்கள். அவருக்கு மருந்துக்காகத் தேன் தேவைப்பட்டது. பல இடங்களில் தேடிப்பார்த்த போதும் கொஞ்சமேனும் கிடைக்கவில்லை. நகரில் விலை கொடுத்து வாங்குவதற்கும் பணம் போதியதாக இருக்க வில்லை. கலீபா தொழுது முடிந்ததும் தமது தேவையை மக்களிடம் சொன்னார்கள். பைதுல் மாலிலிருந்து தமது நோய் நிவாரணத்துக்காகச் சிறிதளவு தேனைப் பெற்றுக்கொள்ள அனுமதியளிக்குமாறு மக்களிடம் கோரினார்கள். இதைக் கேட்ட மக்கள் திகைத்துப் போனார்கள். அவர்களின் உள்ளங்

கள் உருகிப்போயின. பார்த்தீர்களா ஓர் ஆட்சியாளரின் அழகிய முன்மாதிரியை தமது அதிகாரத்தின் மூலம் தமக்குத் தேவையானதைப் பெற்றுக்கொள்ள முடிந்தபோதும் அது வக்ப் செய்யப்பட்ட பொதுச் சொத்து என்பதனால் அதனைத் தமது சுயநலன்களுக்காகத் துஷ்பிரயோகம் செய்யவோ, அபகரிக்கவோ, திருட்டுத்தனமாகப் பெற்றுகொள்ளவோ இல்லை. இதுதான் எமது வரலாற்றுத் தலைவர்களின் முன்மாதிரியாக இருந்திருக்கிறது.

ஸிஹான்: மாஷா அல்லாஹ். ஆனாலும் எமது பாடசாலைக்குள் பொதுச் சொத்துக்கள் சில சேதமாக்கப்பட்டிருப்பதையும் ஒழுங்காகக் கவனிக்கப்படாமல் இருப்பதையும் காணும்போது எங்களுக்குக் கவலையாக இருக்கிறதே?

ஸைமா: ஆமாம். சகோதரர் ஸிஹான் குறிப்பிட்டது மிகவும் சரி. எமது பாடசாலையில் சில வகுப்பறைக்குள் காணப்பட்ட கதிரை மேசைகள் உடைந்தும், சில முற்றவெளிகள் சுத்தம் செய்யப் படாமலும், மலசலகூடப் பகுதிகளில் அழுக்குகள் நிறைந்தும், கிணற்றடிப் பகுதியில் புற்கள் நிறைந்தும் காணப்பட்டதை நான் அவதானித்தேன்.

ஆசிரியர்: நாம் எமது பாடசாலைச் சூழலில் நிறையப் பொதுச் சொத்துக் களைப் பட்டியல் படுத்தினோம். அவை ஒவ்வொன்றும் எங்க ளுடைய அறிவை அதிகரிக்கச் செய்கின்ற வழிகளல்லவா? உதாரணமாக எமது ஒவ்வொரு பாடவேளைகளுக்குமான பாடப்புத்தகங்கள் அரசாங்கத்தினால் இலவசமாக வழங்கப் பட்டிருக்கின்றன.



அவற்றிற்கு அரசாங்கம் பாரியளவு பணத்தைச் செலவு செய்கி றது. எனவே அதற்கு சேதங்கள் ஏற்படாத வகை யில் அழகான முறையில் பாவிக்கின்ற போதுதான் எமக்குப் பயனுள்ள கல்வி கிடைக்கும். எமது ஏனைய

சகோதரர்களுக்கும் அவை பயனுள்ளதாகக் கையளிக்கப்படும். பாடசாலையில் பொதுச் சொத்துக்கள் பலவும் எவ்வாறு சேதமாக்கப்பட்டிருக்கிறன என்பதையும் நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவை ஒவ்வொன்றையும் பாதுகாப்பது பாடசாலை நிர்வாகத்தினது மாத்திரமின்றி, ஒவ்வொரு மாணவருடையதும் பொறுப்பாகும். நாம் பாட சாலையில் உள்ள வளங்களை துஷ்பிரயோகம் செய்யும்போது, சேதப் படுத்தும்போது அதனால் எமது எதிர்காலம் மட்டுமல்ல, எமது சகோதரர்கள், எமது பாடசாலை என்பவற்றினது எதிர்காலமும் பாதிப்படையும். பொதுச் சொத்துக்களைப் பாதுகாப்பது பராமரிப்பது என்பவற்றின் முக்கியத்துவத்தினை உணராததன் காரணமாக எமது பாடசாலையில் மட்டுமல்லாது எமது சூழலில் காணப்படுகின்ற பொதுச் சொத்துக்களும் இன்று சேதமாக்கப்பட்டு வருவதை நாம் காண்கிறோம்.

ரவாஹா: அப்படியாயின் நாம் பாதையோரங்களில், வீட்டு முற்றங்களில் கழிவுப் பொருட்களைக் கொட்டுதல், சிலபோது வாகனத்தில் செல்லும் போது ஏதாவது உணவு, பானங்களை அருந்தி விட்டு அவற்றின் கழிவுகளை வாகனங்களுக்குள்ளே அல்லது பாதையோரங்களில், நீர் நிலைகளில் எறிந்து விட்டுச் செல்லுதல் போன்ற காரியங்கள் பாவமான விடயம்தானே?

ஆசிரியர்: ஆம் ரவாஹா அருமையானதோர் விடயத்தினை நினைவு படுத்தினீர்கள். எமக்கு வழங்கப்பட்ட பொதுச் சொத்துக்களை நாம் மாசடையச் செய்கின்றபோது எமக்கு அல்லாஹ்வினால் வழங்கப்பட்ட அமானிதங்களைத் துஷ்பிரயோகம் செய்கின்றோம் என்பதை உணர்ந்துகொள்ள வேண்டும்.





இதனால் மறுமையில் தண்டனை கிடைப்பதுடன் இம்மையிலும் இதன் பாதிப்புக்களுக்கு நாம் முகங்கொடுக்க வேண்டி ஏற்படும். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் பொதுச் சொத்துக்களை அபகரிப்பது, வீண் விரயம் செய்வது, சேதப்படுத்துவது போன்ற காரியங்களை வன்மையாகக் கண்டித்திருக்கிறார்கள்.

ரஹ்மத்: அவ்வாறு படிப்பினை தரும் சம்பவமொன்றைக் குறிப்பிடுங்கள்.

ஆசிரியர்: இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், தனக்கு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தெரிவித்ததாகப் பின்வரும் சம்பவத்தை அறிவிக்கின்றார்கள்: கைபர் யுத்தம் நடந்து முடிந்த பின்னர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது தோழர்களில் சிலர் அங்கு வந்தனர். மேற்படி யுத்தத்தில் கொல்லப்பட்டவர்களைப் பற்றி அவர் ஷஹீத், இவர் ஷஹீத், என்றெல்லாம் பேசிக் கொண்டார்கள். ஒரு நபரை (அவரது ஜனாஸாவைக்) கடந்து சென்ற அவர்கள் இவரும் ஷஹீத் என்றனர். அது கேட்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நீங்கள் அப்படிக் கூற வேண்டாம். அவர் யுத்தத்தில் கிடைத்த கனீமத் பொருட்களில் ஒன்றான ஓர் ஆடையை அல்லது மேலங்கியைத் (திருட்டுத் தனமாக) அபகரித்துக் கொண்டார். அந்த ஆடையுடன் அவரை நான் நரகில் கண்டேன் என்று கூறி விட்டு, உமர் இப்னு கத்தாபே! நீர் சென்று முஃமின்களைத் தவிர வேறு எவரும் சுவர்க்கம் நுழைய மாட்டார்கள் என்று மக்களுக்கு மத்தியில் சொல்வீராக என்றார்கள். இதில் பொதுச் சொத்துக்களை அபகரிப்பது பாரிய தண்டனைக்குரிய குற்றம் என்பதை உணர முடிகிறதல்லவா?

றிமாஸ்: பொதுச் சொத்துக்களைப் பாதுகாப்பதற்குப் பாடசாலை யிலிருந்து எவ்வாறான நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியும்?

ஆசிரியர்: பாடசாலையில் மாணவர்கள் அனைவரும் பொதுச் சொத்துக்களின் பெறுமதியை உணர வேண்டும். அவற்றின்





தேவைகள், பயன்களை அறிந்து கொள்ள வேண்டும். பாதுகாப்பது பராமரிப்பது தொடர்பாக அவர்களுக்கு வழிகாட்டப்பட வேண்டும். துஷ்பிரயோகம் செய்யும் மாணவர்களைக் கண்டால் அவர்களிடம் பக்குவமாக அத்தவறினை சுட்டிக்காட்ட வேண்டும். பாடசாலையில் நடைபெறுகின்ற காலைக்கூட்டம், மாணவர் மன்றம், கலை நிகழ்ச்சிகள், பெற்றார் பொதுக் கூட்டங்கள் போன்ற சந்தர்ப்பங்களின் போது மாணவர்களுக்கும் பெற்றோர் களுக்கும் அறிவுறுத்தல் வழங்குதல் வேண்டும். அத்தோடு பாடசாலையில் ஒவ்வோர் இடத்திலும் அறிவுறுத்தல் பதாகை களைக் காட்சிப்படுத்த முடியும். ஒவ்வொரு வளத்தின் முக்கியத்துவத்தினையும் குறிப்பிடும் அல்குர்ஆன், அல் ஹதீஸ், அறிஞர்களின் கருத்துக்கள், அரசாங்கத்தின் செய்திகள் குறிப்புகளை உரிய இடங்களில் ஒட்டி மாணவர்களுக்கு அது தொடர்பான பொறுப்புணர்வை ஏற்படுத்தலாம். எமது வீட்டில் உள்ளவர்களுக்கு அறிவுறுத்துதல், அயலவர்கள் நண்பர்களுடன் கலந்துரையாடல்களை மேற்கொள்ளல், பள்ளிவாசல்களில் குத்பாக்களில் பொதுச் சொத்துக்களைப் பராமரிப்பது பற்றித் தெளிவுபடுத்தல் போன்ற நடவடிக்கைகள் பொதுச் சொத்துக்களைப் பாதுகாப்பதற்கான சில தீர்வு நடிவடிக்கைகளாகும்.

அஷ்கர்: இவ்வாறான காரியங்களுக்கு ஒத்துழைப்பது எமக்கு நிறைய நன்மைகளைப் பெற்றுத்தருமல்லவா?

ஆசிரியர்: ஆமாம் நீங்கள் குறிப்பிட்டது போல அல்லாஹ்வின் அன்பு கிடைக்கும். முழு சமூகத்திற்கும் நன்மை கிடைக்கும். பொதுச் சொத்துக்களைப் பாதுகாப்பது பாரியதொரு தர்மம். அத்தோடு சகோதர மக்களிடம் நல்லெண்ணம், நல்லுறவு ஏற்பட வாய்ப்பேற்படும்.

நிஹ்மத்: ஆம் நாம் முதலில் பொதுச் சொத்துக்களைப் பாதுகாக்கும், பராமரிக்கும் பணியினை எமது வகுப்பறையிலிருந்தும் எமது பாடசாலையிருந்தும் ஆரம்பிப்போம்.

ஆசிரியர்: மாஷா அல்லாஹ். அது நல்லதோர் ஆரம்பமாக அமையட்டும். நிச்சயமாக அல்லாஹ். எமது பணிகளை ஏற்றுக்கொள்வான்.

## பயிற்சி

1. பொதுச் சொத்துக்கள் சிலவற்றைக் குறிப்பிடுக.
2. பொதுச் சொத்துக்கள் துஷ்பிரயோகம் செய்யப்படும் சந்தர்ப்பங்கள் நான்கு குறிப்பிடுக.
3. பொதுச் சொத்தைப் பயன்படுத்தல் தொடர்பான வரலாற்றுச் சம்பவமொன்றைக் குறிப்பிடுக.

## செயற்பாடு

1. பொதுச் சொத்துக்களைப் பாதுகாப்போம் எனும் தலைப்பில் கட்டுரை ஒன்று எழுதுக.
2. பொதுச் சொத்தைப் பாதுகாத்தல் தொடர்பான சித்திரங்கள், துண்டுப் பிரசுரங்கள், போன்றவற்றை வடிவமைத்து வகுப்பறையில் தொங்க விடுக.

28

# தேசப்பற்றும் முஸ்லிம்களும்

அன்பின் மாணவச் செல்வங்களே! ஒரு பிள்ளை தன்னைப் பெற் றெடுத்த தாயின் மீது அளவில்லா அன்பும், பாசமும் வைத்திருப்பது இயல்பானது. அது எப்போதும் தன் தாயுடன் மரியாதையுடனும், கண்ணியத்துடனும் நடந்துகொள்ளும். அவ்வாறே மனிதன் தான் பிறந்த தேசத்தையும் நேசிக்க வேண்டும். இதனாலேயே அதனைத் 'தாய் நாடு' என அழைக்கின்றோம். தாயைப் போலவே தாய் நாட்டின் மீதும் அன்பும், பற்றும் கொள்ள வேண்டும் என்பது இதன் எதிர்பார்ப்பாகும்.

தனது நாட்டுக்காகத் தன் உயிரை அர்ப்பணம் செய்த ஒரு முஸ்லிம் பெண்ணின் தியாக வரலாற்றைப் பாருங்கள்.

ஏறக்குறைய நானூறு ஆண்டுகளுக்கு முன் கண்டியில் செனரத் என்ற பெயருடைய ஒரு மன்னன் ஆட்சிசெய்தான். அவனது காலத்தில் இலங்கையின் கரையோரத்தைப் போர்த்துக்கேயர் ஆண்டனர். அவர்கள் ஐரோப்பாவிலிருந்து வந்தவர்கள். அவர்களுக்கும் மன்னனின் மகன்



இராஜசிங்கனுக்குமிடையே சண்டை மூண்டது. அச்சண்டையில் தோல்வி அடைந்த இளவரசன் ஓடி ஒளிந்தான்.

அதனை அறிந்த போர்த்துக்கேயப் படையினர் அவனைத் தேடிச் சென்றனர். இளவரசனோ ஊவா மாகாணத்தில் உள்ள பங்கரகம்மன என்ற கிராமத்தை அடைந்திருந்தான். அங்கிருந்த ஒரு பெரிய பலா மரத்தைக் கண்டான். அதில் ஓர் ஆள் நுழையக் கூடிய ஒரு பெரிய பொந்து இருந்தது. அதனுள் அவன் புகுந்து ஒளிந்தான். அந்தப் பலா மரத்துக்கு அருகில் ஒரு மாட்டுத் தொழுவம் இருந்தது. அங்கே முஸ்லிம் பெண் ஒருத்தி பசுவிலிருந்து பால் கறந்து கொண்டிருந்தாள். அவள் இளவரசன் மரப்பொந்துக்குள் ஒளிவதைக் கண்டாள்.

சிறிது நேரத்தில் இளவரசனைத் துரத்தி வந்த போர்த்துக்கேய வீரர்களும் அவ்விடத்தை அடைந்தனர். இளவரசன் திடீர் என மறைந்ததைக் கண்டு ஆத்திரம்கொண்டனர். அங்கும் இங்கும் தேடினர். பக்கத்தில் பால் கறந்துகொண்டிருந்த முஸ்லிம் பெண்ணைக் கண்டனர். அவளை அணுகி அவர்கள், 'இங்கு வந்த இராஜசிங்கன் எங்கே?' என்று அதட்டிக் கேட்டனர்.

அவள் பயத்தால் நடுங்கினாள். முக்காட்டைச் சரிப்படுத்திக் கொண்டாள். போர்த்துக்கேயப் படைவீரர்கள் மீண்டும் அதட்டிக் கேட்டனர். கண்டேன் என்று சொல்லி இளவரசனைக் காட்டிக் கொடுக்கவோ, காணவில்லை எனக் கூறி பொய் சொல்லவோ அவள் விரும்பவில்லை. மௌனமாகவே இருந்தாள். அரசன் ஒளிந்திருந்த இடத்தை அவர்களால் அறிய முடியவில்லை. போர்த்துக்கேய வீரர்கள் பெருங் கோபம் கொண்டனர். பொறுமையிழந்த அவர்கள் ஈவிரக்கமின்றி அவளைக் கண்டதுண்டமாக வெட்டிக் கொலை செய்தனர்.

போர்த்துக்கேய வீரர்கள் அங்கிருந்து சென்ற பின் இளவரசன் ராஜசிங்கன் வெளியே வந்தான்; இரத்த வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்த அந்த முஸ்லிம் பெண்ணைக் கண்டு அதிர்ச்சியடைந்தான். எனக்காக இவள் தன் உயிரைக் கொடுத்து விட்டாளே என்று பெருந்துயர் கொண்டான். அவள் செய்த உயிர் தியாகத்தை ''மா ரெக லே'' (என்னைக் காத்த இரத்தமே) என மெச்சினான். அந்த பெண்மணியின் தியாகத்தை அவனால் மறக்கவே முடிய வில்லை. சில நாட்களின் பின்னர் இராஜசிங்கன் இவனே இரண்டாம் இராஜசிங்க மன்னனாவான். அவளின் நினைவாக பங்கரகம்மன என்ற கிராமத்தை அவளுடைய உறவினர்களுக்குப் பரிசளித்தான்.

அன்பின் மாணவர்களே! இந்த வரலாற்றுச் சம்பவத்தைச் செவிமடுக்கும் போது மெய்சிலிர்க்கிறதல்லவா? தனது நாட்டின்

ஆட்சியாளர்களை வெளிநாட்டு ஆக்கிரமிப்பாளர்களிடமிருந்து பாதுகாப்ப தற்காக ஒரு முஸ்லிம் பெண்மணி செய்த தியாக வரலாற்றைப் பார்த் தீர்களா? நாட்டுப் பற்றும், நாட்டின் ஆட்சியாளர்கள் மீதும் கொண்டிருந்த நம்பிக்கையும்தான் அவளை இவ்வாறானதோர் தியாகத்தைச் செய்வதற்குத் தூண்டியிருக்கிறது.

ஒரு மனிதன் தனது இனம், மொழி, சமூகம், தான் வாழும் பூமி, நாடு என்பவற்றின் மீது பற்றுக் கொள்வதை இஸ்லாம் விரும்புகிறது. மனிதர் களின் இயல்புகளுக்கு ஏற்பவே இஸ்லாத்தின் அனைத்துக் கடமைகளும் காரியங்களும் ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கின்றன.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தாம் பிறந்த மக்கா நகரத்தையும், இஸ்லாமிய சமூகத்தை உருவாக்கிய மதீனா நகரத்தையும் எப்போதும் நேசிப்பவர்களாக இருந்திருக்கிறார்கள். மக்காவை விட்டு மதீனாவிற்கு வெளியேறிச் சென்றபோது (ஹிஜ்ரத்) மக்காவை நோக்கி

''இந்த பூமியிலுள்ள அனைத்து ஊர்களிலும் நீ தான் எனக்கு மிக விருப்பமான ஊராக இருக்கிறாய். நிச்சயமாக எனது சமூகத்தார் என்னை வெளியேற்றி இருக்காவிட்டால், நீ அல்லாத ஓர் ஊரில் நான் வசித்திருக்கமாட்டேன்'' எனக் (கவலையோடு) குறிப்பிட்டார்கள். (திர்மிதி)

மக்காவை விட்டு மதீனாவுக்கு வந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எப்போதும் தாம் பிறந்த தேசத்தைப் பற்றிய கவலையுடன் இருந்தார்கள். ஆனால் காலப் போக்கில் மதீனா மீதான அன்பு அவரது உள்ளத்தில் எழுந்தது. தமக்கு மதீனாவின் மீது பற்றை உண்டாக்குமாறு அல்லாஹ்விடத்தில் கீழ்வருமாறு பிரார்த்தனை புரிந்தார் கள். 'யா அல்லாஹ்! எனக்கு மக்காவின் மீது எவ்வாறு அன்பு இருக்கிறதோ அதே போன்று மதீனாவின் மீதும் உண்டாக்குவாயாக. அல்லது அதை விட அதிகமான அன்பை உண்டு பண்ணுவாயாக. (புகாரி)

மேலும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிலால் அல் ஹபஷி ரழியல்லாஹு அன்ஹு, ஸல்மான் அல் பாரிசி ரழியல்லாஹு அன்ஹு சுஜப் அர்ரூமி ரழியல்லாஹு அன்ஹு, ஹுதைபதுல் யமானி ரழியல்லாஹு அன்ஹு போன்ற பிற நாடுகளிலிருந்து இஸ்லாத்தில் இணைந்து கொண்ட நபித் தோழர்களை அவர்களது நாட்டின் பெயரோடு சேர்த்தே அழைத்து வந்திருப்பது தமது தோழர்கள் நாட்டின் மீது பற்றுடன் வாழவேண்டும் என்று விரும்பியதைக் காட்டுகின்றதல்லவா?

அன்பின் மாணவர்களே, உண்மையான நாட்டுப்பற்று என்பது நாட்டின் வரைபடத்தையோ பூகோள அமைப்பையோ நேசிப்பது மட்டுமல்ல அந்நாட்டு மக்களை நேசிப்பதையும் குறிக்கின்றது. நாட்டு மக்களின் நலன் கருதி அவர்களுக்குத் தன்னால் முடிந்த சேவைகளை உளப்பூர்வமாக செய்வது, அவர்களோடு இணக்கமாக வாழ்வது, அவர்களுக்காக உழைப்பது போன்றவை உண்மையான தேசப்பற்றின் அடையாளங்களாகும்.

நாட்டின் சுதந்திரம், பாதுகாப்பு, அபிவிருத்தி, கல்வி, ஆரோக்கியம், சகவாழ்வு போன்றவற்றின் வளர்ச்சிக்குத் தன்னலம் கருதாது உழைப்பது அவசியமாகும். நாடு ஆபத்துக்கோ, வறுமைக்கோ, பஞ்சத்துக்கோ, அநியாயத்துக்கோ உள்ளாகும்போது நாடு எதிர்கொள்ளும் சோதனையை விடுவிக்கப் பாடுபடுவதும் தேசப்பற்றின் அடையாளமாகும்.

தேசத்தின் நலனுக்காக இந்நாட்டு முஸ்லிம்கள் உழைத்திருக்கிறார்கள் என்பதை வரலாற்றில் காணலாம். நாட்டின் சுதந்திரத்திற்காக முஸ்லிம்கள் பாடுபட்டிருக்கிறார்கள். சிங்கள மன்னர்களுடன் இணைந்து நாட்டின் நலனுக்காக முஸ்லிம் மக்கள் சேவை செய்திருக்கிறார்கள். மந்திரி பிரதானிகளாகவும், வெளிநாட்டுத்தூதுவர்களாகவும், மருத்துவர்களாகவும், அரச மாளிகையில் சமையலாளர்களாகவும் செயற்பட்டு மன்னர்களின் நன்மதிப்பைப் பெற்றுள்ள வரலாற்று நிகழ்வுகள் வரலாற்று மூலாதாரங்கள் மற்றும் இலக்கிய மூலாதாரங்களில் பதிவாகியுள்ளன.

இன்றும் நம் நாட்டு முஸ்லிம்கள் தம்மால் முடிந்தவகையில் நாட்டின் நலனுக்காகச் செயற்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

**பயிற்சி**

1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரத் செல்லும்போது மக்காவை நோக்கி என்ன கூறினார்கள்?
2. நாட்டுப் பெயருடன் சேர்த்து பெயர் குறிப்பிடப்படும் ஸஹாபாக்கள் மூவரின் பெயர் தருக.

**செயற்பாடு**

1. தேசப்பற்று எனும் தலைப்பில் பாடசாலை சஞ்சிகைக்கு ஒரு கட்டுரை வரைக.